பாரம்பரிய பின்னணிக்கு இணைந்தாற் போல்...
தேர்ந்தெடுப்பீர் குமரன் பட்டுப்புடவைகள்
— இந்த தீபாவளிக்கு




UIPC:KS:3:89

12, நாகேஸ்வரன் சாலை, (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை 600 017.
போன் : 443544 /443278 எமக்கு வேறெங்கும் கிளைகள் கிடையாது

# 'ஸ்பிக்' கசமுசா!

• ஸ்பிக் உரத் தொழிற்சாலை.

சில மாதங்களுக்கு முன்னர் முதல்வர் கருணாநிதி ஒரு கொள்கை அறிவிப்பினை வெளியிட்டார். எந்தெந்த நிறுவனங்களில், தமிழக அரசின் பங்கு பெரும்பான்மையாக இருக்கிறதோ, அங்கே தலைவர்களாக (Chairman) அரசின் பிரதிநிதிகள்தான் இருப்பார்கள் என்பதுதான் அந்தக் கொள்கை அறிவிப்பு. இதைத் தொடர்ந்து தொழில் துறை வட்டாரங்களில் ஏகக் கிசுகிசுப்பு! "இந்த அறிவிப்பு, ஸ்பிக் தலைவராக இருக்கும் எம். ஏ. சிதம்பரத்தை('மேக்' என்று செல்லமாக இவரை அழைக்கிறார்கள்) 'வெளியே போ' என்று சொல்லும் அறிவிப்பு'' என்றார்கள் பலர்.

இதன் பின்னணி என்ன?

அந்தக் காலத்தில் கலைஞர் ஆண்ட போது தமிழ்நாடு தொழில் வளர்ச்சி நிறுவனம் (TIDCO) என்ற அமைப்பு அரசால் ஆரம்பிக்கப்பட்டது. டிட்கோ தனியார்களுடன் சேர்ந்து பல நிறுவனங்களைக் கூட்டுத் துறையில் ஆரம்பித்தது. தூத்துக்குடியில் ஸ்பிக் உரத் தொழிற்சாலை ஆரம்பிக்கப் பல தொழில் அதிபர்களை டிட்கோ அணுகிய போது அவர்கள் பின் வாங்கினார்கள். தைரியமாக முன் வந்து இருபத்தைந்து சத விகித முதலைப் போட்டவர் எம். ஏ. சிதம்பரம். அரசு தன் பங்காக 26 சதவிகிதத்தைப் போட்டது. மீதி 49 சதவிகிதம் பொது மக்களிடம் இருந்து பங்குகளாக வசூலிக்கப்பட்டது. அரசின் அதிகாரிகளிடம் நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பைக் கொடுத்தால் அது இன்னோர் அரசு அலுவலக



• எம். ஏ. சி. ('மேக்')



• ஏ. சி. முத்தையா.

மாக மாறிவிடும் என்று கருணாநிதி கணித்து, எம். ஏ. சிதம்பரத்தையே தலைவராகப் போட்டு ஸ்பிக்கை இயக்கினார். அப்போதிலிருந்தே அதிகாரிகளின் வெறுப்பைச் சம்பாதிக்க ஆரம்பித்தார் எம். ஏ. ஸி.

*1976* — ஆம் ஆண்டு மத்திய அரசிடமிருந்து ஒரு சுற்றறிக்கை வந்தது. எந்தெந்த நிறுவனங்களில் அரசின் பங்கு அதிகபட்சமாக இருக்கிறதோ, அங்கேயெல்லாம் அரசு அதிகாரிகளைத்தான் தலைவராகப் போட வேண்டும் என்றது சுற்றறிக்கை. இதை எடுத்துக் கொண்டு போய்க் கலைஞரிடம் காட்டினார்கள் அதிகாரிகள். ''இதெல்லாம் உத்தரவு இல்லை; ஒரு வழிகாட்டல் போன்றதுதான். சிதம்பரமே தொடர்ந்து இருக்கட்டும்'' என்றார் முதல்வர். இது நடந்தது *1976* — ஆம் ஆண்டு.

**அ**டுத்த பதின்மூன்று ஆண்டுகள் ஒரு பிரச்னையும் இல்லாமல் வெற்றிகரமாகச் சிதம்பரத்தின் தலைமையில் ஸ்பிக் இயங்கி வந்தது. காரணம், அரசியல் தலைமையின் ஆதரவு மட்டும் இருந்ததே தவிர, நிர்வாகத்தில் அரசியல் தலையீடு இல்லை. கூட்டுத் துறையில் டிட்கோ நடத்தி வந்த வேறு பல நிறுவனங்கள் திவாலாகிய போது ஸ்பிக் மட்டும் ஜாம், ஜாமென்று லாபம் சம்பாதித்து வந்தது. ஷேர் மார்க்கெட்டில் அதன் பங்குகளின் விலை உயர்ந்தது. இதற்குள் சிதம்பரத்தின் மகன் ஏ. ஸி. முத்தையா ஸ்பிக்கின் செயல்முறைத் தலைவர் ஆனார். ஏற்கெனவே வெறுப்பில் மூழ்கியிருந்த அதிகார வர்க்கம் சரியான சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருந்தது.

கருணாநிதி தற்போது ஆட்சியேற்ற பிறகு மீண்டும் பிரச்னைகள் ஆரம்பமாயின. அதிகார வர்க்கம் மறுபடி மத்திய அரசின் சுற்றறிக்கையை முதல்வரிடம் காட்டிச் சிதம்பரத்தை மாற்றி அரசு அதிகாரியைத் தலைவராகப் போட வேண்டும் என்று முற்றுகையிட்டது. அதிகாரிகளின் ஆதரவு தமக்கு இருந்தால்தான் சிவப்பு நாடாக்களை முறியடித்து வெற்றிகரமாக ஆட்சி நடத்த முடியும் என்ற எண்ணத்தில் கொள்கை அறிவிப்பை வெளியிட்டு விட்டார் முதல்வர். டிட்கோவிடமிருந்து சிதம்பரத்திற்கு ஒரு கடிதம் வந்தது. 'ராஜினாமா செய்து விட்டுப் புதிய தலைவர் தேர்ந்தெடுக்க ஒத்துழைக்க வேண்டும்' என்று அந்தக் கடிதத்தில் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தது. ஸ்பிக் பங்குதாரர்கள் ஆடிப் போய் விட்டார்கள். தங்கள் பங்குகளின் விலை சரியும் என்று பயந்தார்கள்.

மேலும், மாநில அரசுடனும், மத்திய அரசுடனும் கூட்டுச் சேர்ந்து ஸ்பிக் நிறுவனம், *800* கோடி முதலீட்டில், 'ஏரோமேடிக்ஸ்' என்னும் பெட்ரோலியப் பொருட்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைக்கான ஆரம்ப வேலைகளை நடத்திக் கொண்டிருந்தது. இந்நேரத்தில், சிதம்பரம், ஸ்பிக் தலைவர் பதவியில் இருந்து விலகினால், ஸ்பிக் மட்டுமல்ல; ஆரம்பிக்கப் படவிருக்கும் புதிய நிறுவனமும் பாதிக்கப்படும் என்றும் பங்குதாரர்கள் அஞ்சினார்கள். ஏற்கெனவே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டதால், தமது தற்போதைய பதவிக் காலம் முடியும் வரையாவது (இன்னும் இரண்டு ஆண்டுகள்) விட்டு வைக்க வேண்டும் என்று முதல்வரிடம் கேட்டுக் கொண்டார் சிதம்பரம். ''பார்க்கலாம்'' என்று பதில் வந்தது. பங்குதாரர்கள் கூட்டத்தில் முத்தையா, ''சிதம்பரமே தலைவராக நீடிப்பார்'' என்று அறிவித்தார். அவருக்கு அவசர அழைப்பு வந்தது. '''பார்க்கலாம்' என்றுதானே சொல்லப்பட்டது? நீங்கள் ஏன் அப்படி அறிவிப்பு வெளியிட்டீர்கள்?'' என்று முதல்வர் சார்பில் கேள்வி கேட்கப்பட்டது.

கேட்கப்பட்ட அந்தக் கேள்வி அப்படியே இருக்கிறது. சிதம்பரம் ஸ்பிக் தலைவராகப் பதவியில் நீடித்துக் கொண்டுமிருக்கிறார்.

இவ்வாறு முதல் இரண்டு ரவுண்டுகளில் தோல்வியுற்ற ஐ. ஏ. எஸ். அதிகார வர்க்கம் தனது காயங்களுக்கு மருந்து தடவிக் கொண்டு மூன்றாவதாக ஓர் இறுதி மோதலை நடத்தத் தயாராகி வருகிறது!

— கௌசல்யா.



''நான் வி. பி. சிங்கைப் போல் இருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அதனால் நான் நடித்த தொலைக்காட்சித் தொடரை ஒளிபரப்ப அனுமதி மறுக்கப்பட்டு விட்டது. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், பைஜாமா குர்தாவில் நான் ராஜீவ் காந்தியைப் போலிருப்பதாகப் பலரும் கூறுகின்றனர்! இதற்கு நான் என்ன செய்வது? என்னுடைய முகமே எனக்குப் புரியாத புதிராக உள்ளது!'' — நடிகர் அலோக் நாத்.

— சண்டே அப்சர்வர்.

தகவல்: கீதா பஞ்சு.

உண்மைக் கதை

# ஒரு தவறு ➡ ஒரு தொடர்பு ➡ ஒரு நிறைவு!

மணமகன் மற்றும் மணமகள் தேவை அறிவிப்புகளை வெளியிடும் ஒரு கோவிலில் தமது பெயரைப் பதிவு செய்திருந்தார் பிரபு. கோவிலில் பட்டியல் வெளியான ஒரு வாரத்துக்குள் ஐம்பது அறுபது 'விண்ணப்பங்கள்' வந்து விட்டன. பிரபுவுக்கு ஒரே ஆச்சரியம். 'கண் தெரியாத மாப்பிள்ளைக்கு இவ்வளவு 'கிராக்கி'யா...?' திடீரென்று சந்தேகம் தோன்ற, திரும்பவும் அறிவிப்பு வெளியிட்ட கோவிலுக்குப் போனார். அவர் நினைத்தது போலவே, அறிவிப்பில் அவர் பார்வையற்றவர் என்ற விவரம் தரப்படாமல் விட்டுப் போயிருந்தது!

உடனே தமது தந்தையிடம், கடிதம் எழுதிய அத்தனை பேருக்கும் வரிந்து கட்டிக் கொண்டு, பதில் போடச் சொன்னார். அவரும் ஐம்பது அறுபது போஸ்ட் கார்டுகளில் நடந்து விட்ட தவறைக் குறிப்பிட்டு, ''என் மகன் பார்வையற்றவன் என்பதால் இந்தச் சம்பந்தத்தில் உங்களுக்கு மேற்கொண்டு ஆர்வம் இருக்கும் என நாங்கள் கருதவில்லை'' என்று எழுதி, கடிதத் தொடர்பு கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் அனுப்பினார்.

இதற்குப் பிறகும் ''எங்களுக்கு இந்தச் சம்பந்தத்தில் ஆர்வம் இருக்கிறது'' என்று ஒரே ஒருவர் மட்டுமே எழுதிய கடிதம் பிரபுவின் தந்தை மாணிக்கத்தின் பெயருக்கு வந்தது!

ஜெயலக்ஷ்மி, தனக்கு வாய்க்கும் கணவர் எப்படி இருக்க வேண்டும் என்று மனத்துக்குள் ஒரு கற்பனை பிம்பத்தை வளர்த்துக் கொண்டிருந்தாள் — முதுநிலைப் பட்டம் பெற்ற தன்னை விட அதிகம் படித்திருக்க வேண்டும்; பண்பாளராக இருக்க வேண்டும்; பிறர் உணர்வுகளை மதிக்கும் இயல்புள்ளவராக இருக்க வேண்டும்... அப்பா பார்த்திருந்த வரன் இந்த நிபந்தனைகளுள் முதலாவதைப் பூர்த்தி செய்தது. பிரபு எம். ஃபில். படித்த ஆங்கிலத் துணைப் பேராசிரியர். மற்ற நிபந்தனைகள்...? அவற்றுக்கு அப்பா உத்தரவாதம் அளித்தார். பிரபுவின் தந்தை எழுதிய கடிதமே அவர்கள் பண்பாளர்கள்தான் என்பதை உணர்த்துவதாகச் சொன்னார்.

அது மட்டுமல்ல, அந்தக் கடிதம் வேறு ஒருவிதத்திலும் ஜெயலக்ஷ்மியின் தந்தைக்கு ஆச்சர்யம் அளித்தது! 'பிரபுவுக்குக் கண் பார்வை கிடையாது' என்ற விவரத்தைத் தாங்கி வந்த அக்கடிதத்தின் இறுதியில் இருந்த கையொப்பம், ஓர் இனிய அதிர்ச்சியை ஏற்படுத்தியது. தமது எஸ்.எஸ்.எல்.சி. புத்தகத்தில் கையெழுத்திட்டுள்ள கல்வித் துறைச் செயலர் மாணிக்கத்தின் கையெழுத்தல்லவா இது! எஸ்.எஸ்.எல்.சி. புத்தகத்தை எடுத்து, தூசி தட்டி ஒப்புநோக்கியதும் விஷயம் உறுதியாகி விட்டது.

ஜெயலக்ஷ்மியிடம் விஷயத்தைப் பிரஸ்தாபித்த போது, அவள் மனமுதிர்ச்சியுடனும் உறுதியுடனும் யோசித்து முடிவு கூறினாள்: ''அவர் பார்வையற்றவர் என்பதால் எனது பொறுப்பு சற்று அதிகரிக்கும்; ஆனால் அது எங்கள் வாழ்க்கையில் ஒரு குறையாக இருக்கும் என்று நான் நம்பவில்லை அப்பா...''

ஜெயலக்ஷ்மியின் தந்தை மிகவும் சந்தோஷமாக அவள் ஜாதகத்தை மாணிக்கத்துக்கு அனுப்பினார்.

ஜாதகம் பொருந்தி விட்டது! வழக்கமான பெண் பார்க்கும் படலம் திருப்பிப் போடப்பட்டு, ஜெயலக்ஷ்மியும் அவள் பெற்றோரும் பிரபுவின் வீட்டுக்கு அவரைக் காண வந்தனர். சில நிமிடங்கள் மனம் விட்டுப் பேசியதில் ஜெயலக்ஷ்மிக்கும் பிரபுவுக்கும் நம்பிக்கை வலுத்தது. சீக்கிரமே திருமணத்தை நடத்தி விட பெற்றோர்கள் முடிவு செய்தனர்.

வரதட்சிணை மற்றும் ஜானவாச ஊர்வலம் தவிர, மற்ற எல்லா சம்பிரதாயங்களையும் அனுசரித்துத் திருமணம் நடந்தது.





சுற்றத்தாரும் சில நண்பர்களும் வெளிப் படையாகவும் மறைமுகமாகவும் செய்த விமர்சனங்களைப் பொருட்படுத்தாமல் திறந்த மனத்துடன் தங்கள் மணவாழ்க்கையைத் தொடங்கினார்கள் ஜெயலக்ஷ்மி – பிரபு தம்பதி.

பிரபுவை மணந்ததால் தனக்கு அதிகப்படி 'பொறுப்பு எதுவும் இல்லை என்று சீக்கிரமே உணர்ந்தாள் ஜெயலக்ஷ்மி. தமது தேவைகளைத் தாமே கவனித்துக் கொண்டது போக ஜெயலக்ஷ்மிக்கு வீட்டு வேலைகளிலும் உதவினார் பிரபு.

இந்த அபூர்வ தம்பதியைச் சென்னை சைதாப்பேட்டையில் அவர்களுடைய இல்லத்தில் சந்தித்தோம். ''வங்கியில் வேலை பார்க்கும் மனைவிக்கு வீட்டில் உதவ வேண்டும் என்பதற்காகவே 'கிரெஸ்டா' என்கிற அமைப்பு நடத்தும், பார்வையற்றவர்களுக்கான **Daily Living Skills** பயிற்சி வகுப்புகளில் சேர்ந்து பயின்றேன். அது வரை நெருப்பைக் கண்டாலே பயந்து கொண்டிருந்த நான் நெருப்பைக் கட்டுப் படுத்தி, அழகாக உபயோகிப்பது எப்படி, சமைப்பது எப்படி என்று அங்கே கற்றுக் கொண்டேன். சமைப்பது தவிர, வீட்டைச் சுத்தம் செய்வது, துணி துவைத்து இஸ்திரி போடுவது, தைப்பது என்று எல்லா வேலைகளையும் என்னால் செய்ய முடியும். தேங்காய் துருவினால் ஜெயலக்ஷ்மிக்குக் கை விரல்கள் இழுத்துக் கொள்ளும் என்பதால் அந்த வேலை கண்டிப்பாக என்னுடையது தான்'' என்றார் பிரபு.

''உங்கள் புது மண நாட்கள் பற்றிச் சொல்லுங்களேன்?'' என்று ஜெயலக்ஷ்மியைக் கேட்டோம்.

இலேசான வெட்கத்துடன் சொன்னார்: ''ஆரம்பத்தில் எல்லாவற்றுக்கும் இவருக்குக் கூட நின்று உதவ வேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அவருக்கு உடைகளைத் தேர்ந்தெடுத்துத் தந்தால் கூடப் பிடிக்காது. அவ்வளவு சுதந்திர விரும்பி! அவர் அழகாக 'மேட்சிங்' உடைகளை அணிந்து கொள்வதில்தான் எனக்கு அக்கறை என்பதைப் புரிந்து கொண்ட பிறகு அதற்கு மட்டும் என் உதவியை ஏற்க ஒப்புக் கொண்டார்!

''முன்பெல்லாம் அவர் ஏதாவது கேட்டால் வெறுமே தலையாட்டுவேன். தலையாட்டாமல் என்னை வாய்மொழியாகப் பதில் சொல்ல வைக்க அவர் கொஞ்சம் பாடுபட வேண்டியிருந்தது. அதிகம் பேசுவதோ மற்றவர்கள் பற்றி அல்லது மற்ற இடங்கள் பற்றி விமர்சிப்பதோ எனது இயல்பான சுபாவமில்லை. ஆனால் கல்யாணத்துக்குப் பிறகு என் எண்ணங்களுடன் நான் கண்ட காட்சிகளையும் விவரித்து வர்ணனையாய்ப் பேசிப் புரிய வைக்கப் பழகிக் கொண்டேன். அன்றாடம் உபயோகிக்கும் பொருள்களை ஒரே இடத்தில் வைக்கப் பழகிக் கொண்டேன். இடம் மாற்றி வைத்து விட்டால் என் கணவரின் சீரான இயக்கம் தடைப்பட்டு அவருக்கு மிகுந்த கால விரயமாகி விடும்.

''கணவர் கண் பார்வையற்றவர் என்பதால் என் வாழ்க்கையில் எந்தக் குறையும் இல்லை. அவருக்கும், நிறங்கள் தெரியாது என்பதைத் தவிர எந்தக் குறையும் இல்லை...'' என்று ஜெயலக்ஷ்மி கூற,

''அவளுக்கு ஒரே ஒரு குறை உண்டு'' என்றார் பிரபு. ''எனக்குக் கோபமே வரக் கூடாது என்ற அவள் விருப்பத்தை என்னால் நிறைவேற்ற முடியவில்லை!''

அவர் சிரிக்க, ஜெயலக்ஷ்மியும் அந்தச் சிரிப்பில் சேர்ந்து கொண்டார்.

சந்திப்பு: சீதா ரவி

புகைப்படங்கள்: ஸ்ரீஹரி

---



''இவனுக்கு மனசிலே பெரிய
டி. ராஜேந்தர்னு நினைப்பு!''

''ஏன் அப்படிச் சொல்றே?''

'''மணி என்ன ஆச்சு'ன்னு கேட்
டேன். அதுக்கு, 'எனது சேமிப்பு வித்து!
அதில் வாங்கிய இந்த வாட்ச் எனது
சொத்து! நான் ஏதும் செய்யவில்லை
சித்து! இதில் மணி ஆகுது பத்து!' அப்ப
டிங்கறான்!''

— பூவை. விமலன்.

# ஜென்ம பந்தம்



தெலுங்கு மூலத்துக்குத் தமிழ்க் குரல் வீசும் படம்.

கோதாவரிதான் தன் தாய். அதன் கரையிலிருக்கும் கோவிலுக்குக் கைங்கரியம் செய்வதுதான் தன் வாழ்க்கை என்று வெகுளித்தனமாய் வளைய வரும் ஓர் அப்பாவி கௌதமி — சுஹாசினி. ஆற்றங்கரையில் அனாதையாய்க் கண்டெடுத்து அவளை உயிருக்குயிராய் வளர்க்கும் ஆயுர்வேத (வேத விற்பன்ன) வைத்தியர் சோமயாஜுலு. மேனாட்டுப் படிப்பு என்றாலும் தன் சொல்லைத் தட்டாத பிள்ளை என்பதால் தனக்குப் பிடித்த எதிர்கால மருமகள் என்று உரிமை கொண்டாடி கௌதமியைத் தன் பிள்ளைக்கு நிச்சயதார்த்தம் செய்து கொள்ளும் பண்பாடுள்ள பணக்காரி சௌகார் ஜானகி.

இந்த மூவரும் நமக்கு நெருங்கிய சொந்தம் போன்ற உணர்வில் நெஞ்சில் ஒட்ட வைத்து விட்ட டைரக்டரின் ஜாலத்தை, எத்தனை பாராட்டினாலும் தகும்.

எழில் கொஞ்சும் சோலையில் இடி இறங்கின மாதிரி அந்த விபத்து — கொதியெண்ணெய் தெறித்து கௌதமி முகம் கோரமாகி விட்ட அந்தக் கொடூர விபத்து — அடேங்கப்பா! என்ன பாடுபடுத்தி விடுகிறது!

பளிங்கு நீராய் ஓடும் கோதாவரி நதிக் கரையில் அமர்ந்து கொண்டு நேருக்கு நேர் உரையாடலாய் சுஹாசினி தன் சுக துக்கங்களை முறையிடும் நேர்த்தி; விபத்துக்கு இரையாகித் தனக்கு இனி விடிவே கிடையாது என்று மறுகிக் கிடந்த போது தன்னை மனைவியாக்கிக் கொள்ள ஒருத்தர் முன் வந்ததும் நன்றிப் பெருக்கில் உருக்கம் காட்டும் அந்த நெகிழ்ச்சி — அற்புதமாகச் செய்திருக்கிறார்.

சொற்ப காட்சிகள்தான் என்றாலும் சௌகார் அழுத்தமாகச் சுவடு பதித்திருக்கிறார். பிரதட்சிணம் வருகையில் அழுத்தும் தள்ளாமையில் அவர் சோர்ந்து வியர்த்து அமர, சுஹாசினி பரிவோடு அவரது முகத்து வியர்வையை முந்தானையால் ஒற்றியெடுக்க, அந்தப் பரிவைத் தனக்குள் வாங்கிக் கொள்ளும் பார்வையிலே அனுபவ முதிர்ச்சி தெறிக்கிறது.

வளர்ப்புத் தந்தை சோமயாஜுலு உலுக்கி விடுகிறார். நிச்சயம் செய்த பெண்ணை எப்படியும் தன் மகனுக்கு மணமுடித்தே ஆக வேண்டும் என்று சௌகார் தீவிரம் காட்டும் போது, 'உங்க பையன் வாழ்க்கையை நரகமாக்கிடாதீங்கம்மா,' என்று அவர் வாதாடும் விதம் உருக்கம்.

நிழல்கள் ரவி — முற்பகுதியில் வில்லனின் நிழல் துளியும் காட்டாத பாலிஷ். பிற்பகுதியில் ஏமாற்றுவதாய் நினைத்து ஏமாந்து ஏமாந்து விழுந்து கொண்டிருப்பதை காட்டியிருக்கும் யதார்த்தம். நர்மதாவாய் மாறி வந்த கௌதமியை 'டியர் டியர்' என்று கொஞ்சிக் கொண்டாடும் போலித்தனம். எல்லாம் சேர்ந்து பக்கா வில்லத்தனம்!

ஒரு டிஸ்கோவுக்கு வாய்ப்புத் தராமல் உலவ விட்டிருக்கும் அனுராதாவிடம் கொஞ்சம் பிராண்டல் தெரிகிறது. துணைக்கு ஒய். விஜயா. சுஹாசினிக்குத் தோழிப் பெண் மாதிரி. சினிமா பைத்தியம் என்ற பேரில் அது கொஞ்சம் காமிக் பண்ணுவது நம் பக்கத்துக்கு ஒத்துவராத ரகம்.

வாய் பேச வராத இரண்டுங்கெட்டானாய், சுஹாசினியின் அனுதாபம் பெற்ற ஒரு கொசுறு காரெக்டர். விபத்துக்கு இரையான சுஹாசினியிடம் சௌகாரை அழைத்துப் போகும் போது அவர் படும் பாடு.. அந்த அழுகை... நம் விழிகளில் நீர்த் திரை.

இசையமைப்பு எஸ்.பி.பி. நதி நீரின் பிரவாகமாக ஓடும் கம்பீரம், சலசலக்கும் இனிமை எல்லாவற்றையும் காமிராவின் ஆற்றலில் மட்டுமின்றி இசைத் திறனிலும் உணர முடிகிறது.

இறுதிக் காட்சியில் 'உமன்ஸ் லிப்' பிரசாரமாய்ச் சொல்லிச் சொல்லிச் சுட்டுத் தள்ளும் போது 'ஆமாம் ஆமாம்' என்று தியேட்டருக்குள் எங்கிருந்தோ சில கீச்சுக் குரல்கள் எழுந்தன!

— பி. எஸ். எஸ்.



சம்பத்



# புடைவை செலக்ஷன் சுலபம் அல்ல!

**புடைவைக் கடையில் ஒரு பேட்டி:**

***சண்முகம்:*** வியாபாரம்னு வந்தபின், கஸ்டமர்ஸ் கேட்ட புடைவைகளையெல்லாம் காட்டித்தானே ஆகணும்? பல புடைவைகளை அலசிப் பார்த்து ஒரு புடைவையை எடுப்பது பெண்களோட பிறவிக் குணம். நாலு மணி நேரம் பார்த்து விட்டு, ஒரு புடைவை வாங்கியவர்களும் உண்டு; அரைமணியில் புடைவை வாங்கிக் கொண்டு போனவர்களும் உண்டு. ஒரு தோராயமான கணக்கு சொல்லட்டுமா? இந்தக் கடையில், நான் மட்டும், சராசரியாய்த் தினம் அறுபது, எழுபது புடைவைகள் விற்கிறேன். ஒவ்வொரு நாளும் குறைந்தது நாலாயிரம் புடைவையாவது பிரித்துக் காட்டுவேன். புடைவைகளைப் பிரித்துக் காட்டுவதை விட, மறுபடி மடித்து வைப்பதுதான் சிரமமான வேலை. உடனுக்குடன் மடித்து வைத்து விடுகிறவர்களும் உண்டு; மொத்தமாய் இரவு கடையை மூடும் போது மடித்து வைக்கிறவர்களும் உண்டு. சில கடைகளில், சீசன் நேரத்தில், மறுபடி ஒழுங்காய்ப் புடைவைகளை மடித்து வைத்து விட்டு, வீட்டுக்குப் போய்ச் சேர இரவு பன்னிரண்டு, ஒன்று வரை கூட ஆகி விடும். ஆனாலும் வியாபாரம் என்று வந்து விட்டால், சலித்துக் கொள்ளக் கூடாது. நாலே புடைவைகளை மட்டும் காட்டி விட்டு, நிறுத்திக் கொண்டால், ''வெரைட்டி இல்லை'' என்று கஸ்டமர்கள் நினைத்துக் கொண்டு விடுவார்கள்.

**திருமதி மங்களம் நடராஜன்:** ''புடைவை வாங்குவது என்பது அவ்வளவு சுலபமான வேலை இல்லை. ஒரு புடைவை வாங்க வேண்டுமானால், புடைவையின் வண்ணம், டிசைன், பார்டர், தலைப்பு இப்படி எத்தனையோ அம்சங்களைப் பார்க்க வேண்

டும். அதுவும் பட்டுப் புடைவை என்றால், இந்த அம்சங்களுடன் கூட ஜரிகை, (அது அசல்தானா?) என்ன ஊர், எவ்வளவு எடை போன்ற அம்சங்களும் முக்கியமாய்ப் பார்க்க வேண்டியவை. இதையெல்லாம் பார்த்தபின் விலை! விலை குறைப்பு முயற்சியையும் பெண்கள் விட்டு விட மாட்டார்கள். ஒரு பெண் புடைவை வாங்கும் போது, கூட இருந்து பாருங்கள். பத்து இருபது புடைவைகளைப் பார்த்து விட்டு ஒன்றை செலக்ட் செய்வது என்பது சிரமமான காரியம்தான் என ஒப்புக் கொள்வீர்கள். தவிர, ஒருவர் அல்லது இருவர் கடைக்கு வந்து வீட்டில் இருக்கும் மாமியார், ஓர்ப்படி என்று பலருக்கும் சேர்த்து வாங்க வேண்டும் என்கிற போது, வாங்குகிற புடைவை, அவர்களுக்கும் பிடித்தாற்போல இருக்க வேண்டுமில்லையா?''

''உங்கள் கணவரையும் கன்ஸல்ட் செய்வீர்களா?''

நடராஜன் குறுக்கிட்டு, லேசாய்ச் சிரித்தபடி, ''பில் வந்ததும், பணம் கேட்பார்களே அப்போது, 'நன்றாய் இருக்கிறதில்லையா?' என்று கேட்பார்கள். தட்ஸ் ஆல்!'' என்றார்.

இவர்களின் பெண் சந்திரா சொன்ன விவரம்: கடைக்குள் நுழைந்த நேரம் பிற்பகல் ஒரு மணி. புடைவை வாங்கி முடித்த போது மணி மூன்று. பார்த்த புடைவைகள் சுமார் நாற்பது; வாங்கியவை இரண்டு.

**சம்பத்:** கடையில் போட்டிருந்த நாற்காலியில் குழந்தையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் சம்பத். அவர் சொன்னார்: ''பெண்களோட கேரக்டர் தெரிஞ்சதுதான். ஆஃப்டர் ஆல், மனைவிக்காகப் பொறுமையாய்க் காத்திருப்பதில் என்ன தப்பு? தினம் தினமா புடைவை வாங்க வருகிறோம்? நானும் அவளுடன் நின்று கொண்டு, புடைவைகள் பார்த்துக் கொண்டிருந்தால், இந்தக் குழந்தை (ஸ்ருதி) படுத்தும். வேலை நடக்காது. அதுதான் நான் இங்கே வந்து விட்டேன். புடைவையைக் கட்டிக்கொள்கிறவளுக்குப் பிடித்திருந்தால் சரி! நாம் ஏன், 'இதை வாங்கிக் கொள், அதை வாங்கிக் கொள்' என்று சொல்ல வேண்டும்? நம் பட்ஜெட்டில், பிடித்த புடைவையை வாங்கிக் கொண்டால் இரண்டு பேருக்குமே திருப்தி. இப்போதெல்லாம், புதுப் புது டிசைன்களில் நிறைய புடைவைகள் வருகின்றன. அதனால் செலக்ட் பண்ண நேரம்தான் ஆகும். அனாவசியமாக எரிச்சல்படாமல் நிலைமையைப் புரிந்து கொண்டு, பொறுமையாய் இருப்பதுதானே சார், புத்திசாலித்தனம்!''

பேட்டி: ஜூலி

படம்: யோகா


போஃபர்ஸ்

எல்லாத் தட்டுப்
பாட்டுக்கும் ராஜீவ்
தான் காரணம்!
எழுச்சி நாள்லே
கலந்துக்க வா!
எழுச்சி
நாள்
உண்ணாவிரதம்
எல்லாத் தட்டுப்
பாட்டுக்கும் இவர்
தான் காரணம்!
உண்ணாவிரதம்
இருக்கலாம் வா!
உன் மேல் ஏறி
உக்காந்து நான்
வழி காட்டணும்!
அதை நடக்க
விட மாட்டேன்!
ராஜ்ய சபா
மைனாரிட்டி
பஞ்சாயத் ராஜ்
மசோதா



# கல்கி

1989 அக்டோபர் 22
மலர் 48 இதழ் 12
சுக்ல ஐப்பசி 6



## பிரதமரின் கௌரவம் பாதாளத்தில்!

போஃபர்ஸ் ஊழல் மீண்டும் வெடித்திருக்கிறது! நம் நாட்டில் ஸி. ஏ. ஜி. போல ஸ்வீடனிலும் உண்டு. அந்தத் தேசியத் தலைமைக் கணக்காயர் குழு, போஃபர்ஸ் விவகாரத்தை நன்கு ஆராய்ந்து ஓர் அறிக்கை தயாரித்து, ஸ்வீடிஷ் அரசிடம் தந்தது. அதன் ஒரு பகுதியை வெளியிட்ட ஸ்வீடிஷ் அரசு, இன்னொரு பகுதியை அமுக்கிவிட்டது. 'அது அறிக்கையின் ரகசியப் பகுதி' என்பதாகக் கூறி மழுப்பி விட்டது. இப்போது அந்த ரகசியப் பகுதியைத்தான் ஹிந்து நாளிதழ் அம்பலப்படுத்தியிருக்கிறது. இனி ரகசிய மில்லாத அந்த ரகசியப் பகுதி, போஃபர்ஸ் பேரத்தில் கமிஷன் வழங்கப்பட்டது என்று உறுதியாகக் கூறுகிறது. அந்தக் கமிஷன் இந்தியருக்கு வழங்கப்பட்டது என்றும் சொல்கிறது. அந்த இந்தியர், வின் சத்தா என்றும் சுட்டிக் காட்டுகிறது.

ஆகமொத்தம், பிரதமர் ராஜீவ் காந்தி திரும்பத் திரும்பக் கூறி வந்தவையெல்லாம் உண்மைக்குப் புறம்பானவை என்பதாகச் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபணமாகியுள்ளது. நாட்டு மக்களின் கவனத்தைத் திசை திருப்பி, இந்திய அரசு ஏமாற்றி வந்திருக்கிறது என்பது நிச்சயமாகியிருக்கிறது. பேட்டிகளிலும் பொதுக் கூட்டங்களிலும் மட்டுமல்ல; நாடாளுமன்றத்திலேயே உண்மைகளை மறைத்துப் பிரதமர் பேசியிருக்கிறார். இவற்றையெல்லாம் வேண்டுமென்றே உள்நோக்கோடு ராஜீவ் காந்தி செய்திருக்கிறார் என்று நம்பவும் இடமிருக்கிறது!

அந்த நம்பிக்கைக்கு உரமளிப்பவை இரண்டு அம்சங்கள்: இத்தனை விஷயங்கள் அம்பலமான பின்னரும், அருண்சிங், சுந்தர்ஜி போன்ற முக்கியமான பலரும் குற்றம் நடந்திருப்பதை எடுத்துக்காட்டிய பிறகும் ,ராஜீவ் காந்தி, போஃபோர்ஸ் ஒப்பந்தத்தை ரத்து செய்யத் தயாராக இல்லை! அந்நிறுவனத்தைத் தட்டிக் கேட்கக் கூடத் துணியவில்லை! கமிஷன் பெற்ற குற்றவாளிகள் மீது நடவடிக்கை எடுக்கவும் அவர் சித்தமாக இல்லை! மாறாக, வின் சத்தா தப்பிச் செல்லவே எல்லா வசதிகளையும் இந்திய அரசு செய்தளித்திருக்கிறது! 'ஏன்?' என்ற கேள்வி எழுகிறது. பதில் இதுவாகத்தான் இருக்க முடியும்:

ஏனென்றால், உண்மைக் குற்றவாளி போஃபர்ஸ் நிறுவனமோ, அல்லது வின் சத்தாவோ அல்ல, பின்னணியில் உள்ள வேறு ஒருவரே! அந்த வேறு ஒருவருக்காகத் தான் போஃபர்ஸ் கமிஷன் தந்தது. அந்த வேறு ஒருவர் சார்பில்தான் வின் சத்தா பெற்றுக் கொண்டார். பல்வேறு ரகசிய நிறுவனங்கள் பெயரில் ரகசியக் கணக்குகளில் பணம் செலுத்தப்பட்டது! அந்த வேறு ஒருவர் யார்?

இவ்வளவு தூரம் விஷயம் அம்பலமாகி விசுவரூபம் எடுத்த பிறகும் பிரதமர், 'விளக்கம் கேட்கிறேன்' என்கிறாரே தவிர, 'தார்மிகப் பொறுப்பு ஏற்று ராஜினாமா செய்கிறேன்' என்று கூறும் துணிவு அவருக்கு வரவில்லை. காரணம் என்ன? பதவியைத் துறந்து, அதிகாரத்தை இழந்து விட்டால் நிலைமை தம் கைமீறிப் போய்விடும் என்று அஞ்சுகிறார்! குற்றவாளிகள் மீது நடவடிக்கை எடுத்தாலோ, அல்லது போஃபர்ஸ் நிறுவனத்தினரைத் தட்டிக் கேட்டாலோ அவர்கள் வேறு பல உண்மைகளைத் தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக வெளியிட்டு விடுவார்கள் என்று பிரதமர் பயப்படுகிறார்! இத்தகைய நியாயமான முடிவுக்கே நாம் வரவேண்டியிருக்கிறது.

ராஜீவ் ராஜினாமா செய்யாது போனாலும் தேர்தலில் மக்கள் அவரை நிராகரித்து விடுவார்கள் என்பது வேறு விஷயம். காங்கிரஸ்காரர்களே ராஜீவின் தலைமையில் தேர்தலைச் சந்திக்க அஞ்ச வேண்டிய நிலைமை உருவாகி விட்டது! கட்சிக்குள் ஒரு புரட்சி உருவாகி, ராஜீவை அகற்றிவிட்டுப் புதிய தலைமைக்குக் காங்கிரஸ் இடமளித்தாலன்றி, ராஜீவ், தம்முடன் தமது கட்சியையும் இழுத்துக் கொண்டுதான் அதள பாதாளத்தில் விழப் போகிறார்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஐடிபிஐ-முதலீட்டுப் பத்திரங்கள்

# முதலீட்டு ஆதாய வரி விலக்குப் பெற ஒரு கவர்ந்திடும் வழி



- ஆண்டு முழுவதும் சமவிலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம், 1961, பிரிவு எண் 54E-ன் கீழ் முதலீட்டு ஆதாய வரி விலக்கு.
- செல்வ வரிச் சட்டம், 1957, பிரிவு எண் 5(1)xvie)-ன் கீழ் செல்வ வரி விலக்கு.
- வருமான வரிச் சட்டம், பிரிவு எண் 80-Lன் கீழ் வருமான வரி குறைப்பு.
- ஆண்டொன்றுக்கு 9% விகிதத்தில் ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி வழங்கப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகட்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்பொழுது கழிக்கப்படமாட்டாது.
- வெளியூர்க் காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sobhagya-B/89 TAM



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபிஸை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்:

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், கொலபா, பம்பாய் 400 005

அடுத்த நூற்றாண்டு:

# அறிவுதான் சக்தி!

## சுஜாதா

இன்டெலிஜன்ஸ் — புத்தி அறிவு — என்பதை அலசிப் பார்க்கலாம். இன்டெலிஜன்ஸ் என்கிற வார்த்தை லெகர் என்கிற லத்தீன் வார்த்தையிலிருந்து மருவியது. அந்த வார்த்தைக்கு அர்த்தம் — சேகரிப்பது. சேகரிப்பது, சேர்த்து வைப்பது, அதிலிருந்து தேர்ந்தெடுத்து ஒரு முடிவுக்கு வருவது. இதுதான் அறிவு என்றால் கம்ப்யூட்டருக்கு அறிவு புகட்ட முடியும். செஸ் விளையாட்டையே எடுத்துக் கொள்ளுங்கள். ஆரம்ப காலத்தில் செஸ், சதுரங்கம், செக்கர்ஸ் போன்ற விளையாட்டுக்களின் ரகசியத்தைக் கம்ப்யூட்டருக்குச் சொல்லிக் கொடுப்பதுதான் அறிவு என்று ஆராய்ச்சியாளர்கள் எண்ணினர். அப்படி இல்லை. மிக அருமையாக செஸ் ஆடக் கூடியவர்களுக்கு வீட்டில் ஒரு ஃப்யூஸ் போனால் போடத் தெரியாது. ரொம்ப சாதாரணமாகச் செஸ் ஆடுபவர்கள் அருமையாகச் சமைக்கலாம். அல்லது மிக அழகாகச் சித்திரம் வரையலாம். அதனால் ஒரு துறையில் தேர்ந்திருந்தால் மட்டும் அது புத்திசாலித்தனம் ஆகாது.

பொதுப்படையான அறிவுபூர்வமான காரியங்கள் என்பவை எவை? அவற்றுக்கு ஏற்ற தகுதிகள் என்ன? என்பதை ஆராய்ந்தார்கள். அவை... என்ன என்று பார்க்கலாம்.

அறிவு என்பது பல சாத்தியக் கூறுகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது. யூகம். இப்படிச் செய்தால் நல்லது என்று தீர்மானிப்பது.

அறிவு என்பது இப்படிச் செய்தால் என்ன என்று முயன்று பார்ப்பது. சரியாக வரவில்லையா, இப்படிச் செய்து பார்ப்போமே என்று மற்றொன்றை முயன்று பார்ப்பது.

அறிவு என்பது ஒரு விரும்பிய குறிக்கோளிலிருந்து பின்னோக்கிச் சிந்திப்பது. குறிக்கோள் என்பது கல்யாணமாக இருக்கலாம் அல்லது போஸ்ட் ஆபிசை அடைவதாக இருக்கலாம். குறிக்கோளிலிருந்து எவ்வளவு தூரம் விலகியிருக்கிறோம் என்று அறிந்து, அந்த விலகலின் அளவைக் குறைப்பது. இம்மாதிரி அறிவின் அம்சங்களை அலசிப் பார்த்தால்தான் கம்ப்யூட்டருக்கு அறிவு புகட்ட முடியும்.

கம்ப்யூட்டரின் வேகத்தை அளக்க சில அளவுகோல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றினை 'மிப்' என்று சொல்வார்கள். மிலியன் இன்ஸ்ட்ரக்ஷன்ஸ் பர் செகண்டு என்பதின் சுருக்கம் அது. ஒரு செகண்டுக்கு எத்தனை மிலியன் (பத்து லட்சம்) ஆணைகளை அது நிறைவேற்றும் என்பதை அளவு கருவியாக வைத்திருக்கிறார்கள். சாதாரணமாக சிலிக்கன் சில்லுகள் ஒன்பது மிப் வரை வந்து விட்டன. பெரிய கம்ப்யூட்டர்கள் தொண்ணூறு கூட போகும்.

இது வெறும் வேகம். அது போல



**DON'T WORRY; BE HAPPY!**

**கல்கி 1.10.89 இதழில் சுஜாதா கேட்ட கேள்விக்கு, 'டோண்ட் ஒர்ரி; பி ஹாப்பி' புகழ் 'பாபி மக்ஃப்ரே' என்ற சரியான பதிலை எழுதியவர்கள் பதினோரு பேர். இவர்களுள் குலுக்கல் முறையில் ரூ. 25 பரிசு பெறுபவர்:**

**செ. முரளி,**
**இராம விலாஸ்,**
**95/1 வடக்கு ஆண்டார் வீதி,**
**திருச்சி — 620 002.**

ஃப்ளாப் என்றும் ஒரு அளவு இருக்கிறது. ஃப்ளோட்டிங் பாயிண்ட் என்று ஒரு வகை கணக்கு போடும் திறமையை வைத்து மெகா ஃப்ளாப் கிகா ஃப்ளாப் என்று கம்ப்யூட்டரின் வேகத்தைக் குறிப்பிடுகிறார்கள்.

கிப் என்று புது அளவு சொல்கிறார்கள். நாலெட்ஜ் இன்ஃபர்மேஷன் ப்ராஸஸிங் சிஸ்டம் என்பர். இந்த வகை கம்ப்யூட்டர்களுக்கு 'லிப்ஸ்' என்று அளவு சொல்கிறார்கள். லாஜிக்கல் இன்ஃபர்மேஷன் ப்ராஸஸிங் சிஸ்டம் என்பர்.

ஜப்பானில் ஒரு முகமற்ற கட்டடத்தில் புதிய ஐந்தாம் தலைமுறை கம்ப்யூட்டர் ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இந்த கம்ப்யூட்டர்கள், சித்தாந்தத்தில் இந்தக் காலத்துக் கம்ப்யூட்டர்களிலிருந்து முற்றிலும் வேறுபட்டவை. அடுத்த நூற்றாண்டின் துவக்கத்தில் இந்த செயற்கை அறிவு கம்ப்யூட்டர்களால், மனித சமுதாயத்தில் ஒரு புரட்சிகரமான மாறுதல் வரப் போகிறது. இன்றைய மிக அதிவேக ஸூப்பர் கம்ப்யூட்டர்களைப் போல் பன்மடங்கு இவை வேகமாக இருக்கப் போகின்றன.

இந்த வகை கம்ப்யூட்டர்களுடன் நாம் தினப்படி பேசிக் கொள்ளும் சாதாரண மொழிகளில் பேச முடியும். இவற்றுக்குப் படம் காட்டி புரிய வைக்க முடியும். கீ போர்டு மூலமாக அல்லது கையெழுத்து மூலமாக அவற்றுக்கு ஆணைகள் பிறப்பிக்க முடியும்.

இந்த ஐந்தாம் தலைமுறை கம்ப்யூட்டர்களைப் பயன்படுத்த கம்ப்யூட்டர் மொழி தேவையில்லை. அதற்கான சிறப்பு பயிற்சி ஏதும் தேவை இருக்காது. சமுதாயத்தின் அத்தனைத் தளங்களுக்கும் இந்தக் கம்ப்யூட்டர்கள் பயன்படப் போகின்றன. பயன்படுத்துவோருக்குச் சிறப்பாக ஏதும் ஞானம் தேவையிருக்காது. பயன்படுத்துபவரைக் கேள்வி கேட்டு, அபிப்ராயம் கேட்டு, அந்த விடைகளிலிருந்து அவர் தேவையைப் புரிந்து கொள்ளக்கூடிய சக்தி, அந்தக் கம்ப்யூட்டர்களுக்கு இருக்கும். இவை அதிக விலை இருக்காது. அதனால் பரவலாகப் பயன்படுத்தப்படும். அலுவலகங்களில், தொழிற்சாலைகளில், ரெஸ்டாரண்ட்டுகளில், கடைகளில், வயல்களில், ஏன் மீன் பிடிப்பில், எல்லாத் துறைகளிலும் பயன்படும். குறிப்பாக, நம் இல்லங்களில்.

இந்த 'அறிவுக் கம்ப்யூட்டர்களை'த் தொண்ணூறுகளிலேயே கொண்டு வர இருக்கிறார்கள். இவை உலகெங்கும் பரவும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

ஜப்பான் நிகழ் காலச் சாதனைகளில் ஓர் எல்லையை அடைந்து விட்டது. அவர்கள் விற்கும் எல்லா பொருட்களுமே ஒரு வியாபார எல்லைக்கு வந்து விட்டன. இனிமேல் மூன்று மாசத்துக்கொருமுறை கார் மாற்றினால்தான் கார் வியாபாரம் பெருகும். இந்த திகட்டல் அளவுக்கு வந்து விட்டதால், எதிர்காலத்தில், ''ஜப்பான், பொருட்களை விட அறிவை, அறிவுச் சாதனங்களை விற்பதில் கவனம் செலுத்தப் போகிறது.

'அறிவே சக்தி' இந்த வார்த்தைகளை முதலில் சொன்னது கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸன்ட்ஸூ என்கிற சீன அறிவாளி.

மாட்ஸே துங், ஜப்பானிய பேரரசு, அமெரிக்க ராணுவம் எல்லாரும் ஸன்ட்ஸூவின் பொன்மொழிகளை மனனம் செய்தார்கள்.

நவீன கம்ப்யூட்டர் இயலில் இந்தப் பொன் மொழிக்கு வேறு ஒரு அர்த்தம் கிடைத்திருக்கிறது.

''அறிவுதான் சக்தி. இந்தச் சக்தியால் ஒரு அரசனோ ஒரு நல்ல தலைவனோ அபாயமின்றித் தாக்க முடியும். இரத்தம் சிந்தாமல் வெல்ல முடியும். மற்றவர்களை மிஞ்ச முடியும்'' என்றார் ஸன்ட்ஸூ. ஜப்பானியர்கள் இப்போது அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

(தொடரும்)



பத்து பணக்காரர்கள் செய்கின்ற முடிவைப் பதினோரு ஏழைகள் மாற்றி விடலாம் என்பது ஜனநாயகத்தின் பலம். பத்து புத்திசாலிகள் செய்கின்ற முடிவைப் பதினோரு முட்டாள்கள் மாற்றி விடலாம் என்பது ஜனநாயகத்தின் பலவீனம்!

— டேவிட்லோவின்.

தகவல்: சி. மணி.

# உங்கள் நம்பகமான ஃபாரெக்ஸ் இப்போது, சுவையிலே சிகரம்!

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதம்
ஆகும்போது அவனுக்கு புதிய சுவைமிக்க
ஃபாரெக்ஸ் துவக்குங்கள். 3 முதல் 4
தேக்கரண்டி வெது வெதுப்பான நீரில் ஒரு
தேக்கரண்டி ஃபாரெக்ஸ் கலந்து
கொடுங்கள். ஃபாரெக்ஸ் சுவை மிக்கது.
முன்னைவிட அதிக ஊட்டச்சத்து மிக்கது.




- சுவை மிக்கது
- ஊட்டச்சத்து மிக்கது

**ஃபாரெக்ஸ்®-**
**சுவையுடன் வளரும் வழி.**

GX/66/2t3 TML




ஒரு செயலில் நாம் வெற்றிபெற வேண்டுமென்றால், அச் செயலில் நாம் காட்டும் ஆர்வத்தைப் பொறுத்துத்தான் நமது செயல் வெற்றி பெறுகிறது என்பது உங்களுக்குத் தெரியும்.

உதாரணமாக, ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவேண்டும் என்ற ஆர்வம் தற்போது எல்லோரிடமும் காணப்படுகிறது.

ஆனால்.......

நம்மால் ஆங்கிலத்தில் பேச முடியுமா என்ற சந்தேகம்,

ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்ற தயக்கம்,

பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நாம் எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்படவில்லையே என்ற சலிப்பு

இது போன்ற சிறு, சிறு தடைக்கற்கள்தான் நம்முடைய ஆர்வத்திற்கு அணைபோட்டு விடுகின்றன.

நாமே நம்முடைய ஆர்வத்திற்கு அணைபோடலாமா?

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற **விவேகானந்தா கல்வி நிலையத்தினர்** அளிக்கும் ஓர் எளிய பயிற்சியை மேற்கொண்டால் இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுதவும், தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கம் நீங்கி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச | உங்களால் முடியும்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் இப்பயிற்சியை நீங்கள் மேற்கொள்ளலாம்.
"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

இப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி கீழ் கண்ட முகவரிக்கு அனுப்புங்கள்.

இப் பயிற்சியில் சேருவதற்கான விண்ணப்பமனுவையும், மற்ற விவரங்களையும் உடனே அனுப்பி வைக்கிறோம்.

நீங்கள் தொடர்புகொள்ள
வேண்டிய முகவரி

விவேகானந்தா கல்வி நிலையம்
9, மேட்லி ரோடு, தி.நகர்,
சென்னை 600 017.

NAGA

* ராஜேந்தர் பிரியன், திருச்சி.

**? டி. ராஜேந்தரின் உண்ணாவிரதப் போராட்டம் அவரை எதிர்த்து தி. மு. க. நடத்தும் உண்ணும் விரதப் போராட்டம் ஆகியவை பற்றி தங்கள் கருத்து...?**

! பேட்டன் டாங்க் என்பது பாகிஸ்தான் அமெரிக்காவிடம் பெற்ற சக்தி மிக்க ஆயுதம். ஆனால் அதை உபயோகிக்கும் ஆற்றலை சரிவரப் பெறாததால் இந்தியா — பாக் யுத்தத்தில் பாகிஸ்தானின் பல பேட்டன் டாங்குகள் அழிவுற்றன. அது போல் உண்ணாவிரதம் காந்திஜி கையில் ஒரு சக்தி மிக்க ஆயுதமாகப் பயன்பட்டது. ஆனால் போலி காந்திகளிடம் சிக்கும் போது அதுவே கேலிக் கூத்தாகி விடுகிறது!

* கே. ரமேஷ், சென்னை.

**? ஒருவேளை கலைஞருக்குப் பதில் ஜெய லலிதா முதல்வராகியிருந்தால்...?**

! போடி கலவரத்துக்கு அப்போதும் அரசின் மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கும்!

* ஜி. கதிரேசன், சிறுமுகை.

**? தீரர் சத்தியமூர்த்தி படத்தைத் திறந்து வைத்த பிரதமர் அவரை குருமூர்த்தி என்றே குறிப்பிட்டிருக்கிறாரே?**

! அதைவிட வேடிக்கை, சங்கர் தயாள் சர்மா அவரை இருமுறை திருத்தியும் கூட தொடர்ந்து குருமூர்த்தி என்றே குறிப் பிட்டதுதான்! அரண்டவர் கண்ணுக்கு சத்தியமூர்த்தி கூட எக்ஸ்பிரஸ் குருமூர்த்தி யாகத் தெரிகிறாரோ என்னவோ!

* அ. கயல்விழி, விருத்தாசலம்.

**? எனக்கு மட்டும் பதில் சொல்ல மறுக் கிறீர்களே, ஏதாவது சம்திங் தேவையா?**

! ஆமாம்; கேள்வியில் சம்திங் இருக்க வேண்டும்.

* பி. எல். பரமசிவம், மதுரை.

**? பாப்ரி மஸ்ஜித்தை இடிக்காமல் அப் படியே பார்ட் பார்ட்டாக எடுத்துப் போய் வேறு இடத்தில் நிர்மாணித்து விட்டு ராம ஜன்ம பூமியை ஹிந்துக்களிடம் ஒப்படைக்க லாம் என்ற யோசனை...?**

! எவ்வளவு பெரிய மனிதரிடமிருந்து வந்திருந்தாலும் ஏற்பதற்கில்லை. 'பாப்ரி மஸ்ஜித்; இருக்கிற இடத்திலேயே இருக் கட்டும்; ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாக இரு மதத்தவரும் பொது வாக வழிபடக்கூடிய புனித பூமியாக அது விளங்கட்டும்' என்று சொல்லக்கூடிய 'தில்' ஒரு தலைவருக்கு ஏற்படுமானால், அவரே என் மதிப்பில் உயர்வார்!

* ஆர். வேலுமணி, திருப்பாதிரிபுலியூர்.

**? 'சஞ்சய் காந்தி போல் ஒரு நபர் கிடைத் தால் அவரை மறுமணம் செய்து கொள் வேன்' என்று மேனகா கூறியிருப்பது சரியா?**

! இளம் விதவைகள் மறுமணம் செய்து கொள்ள முன்வருவதில் தவறு ஏதும் இல்லை. இந்தத் துணிவைப் பாராட்டும் போதே அந்த நிலையிலும் காலஞ்சென்ற தம் கணவரைப் போல் ஒருவர் என்று அவர் கூறியிருப்பது அவர் மன வலிமையை உணர்த்தி, நம்மை நெகிழச் செய்கிறது.

* டி. சீனிவாசன், சென்னை.

**? பஸ் கட்டண உயர்வு கண்டிக்கத் தக்கது தானே?**

! மக்களின் கண்டனத்துக்குத் தலை வணங்கி கட்டண உயர்வைக் கணிசமாகக் குறைத்தது மட்டுமின்றி, பஸ் ஸ்டாண்டு குழப்பங்களையும் நீக்கியது பாராட்டுக்கு உரியது.

* மஞ்சுதேவன், கல்கத்தா.

**? மோஹீந்தர் அமர்நாத்தை திரும்பவும் செலக்ட் செய்திருக்கிறார்களே...?**



* சக்தியற்ற ஆயுதம்

நீங்கள் கேட்டவை — தராசு

# கலைஞருக்குப் பதில் ஜெயலலிதா முதல்வராகியிருந்தால்?



* மன வலிமை



* பழசை மறந்து...



* வெற்றிச் சங்கு...?



* சரியான தீர்ப்பு.

! இந்திய அணி சமீபத்தில் வரிசையாகத் தோல்விகளைச் சம்பாதித்தது. இவரோ அனுபவசாலி. பேட்டிங்குக்கும் பந்து வீச்சுக்கும் நிச்சயம் கை கொடுப்பார் என்ற நம்பிக்கை, முன்பு 'ஜோக்கர்கள்' என்று இவர் தேர்வுக் குழுவைக் குறிப்பிட்டதை மறந்து போகச் செய்துள்ளது.

*** ஆர். சுப்பிரமணியம், பூனாம்பாளையம்.**

**? தி. மு. க. நடத்திய மனிதச் சங்கிலி போராட்டம் குறித்து...?**

! தேவையற்றது. அரசுகள் பேசித் தீர்க்க வேண்டிய விஷயத்துக்கெல்லாம் கட்சிகள் போராட்டம் நடத்திக் கொண்டிருப்பது தவறு. அது ஒருபுறமிருக்கட்டும். பத்து கிலோ மீட்டர் தூரத்துக்குச் சென்னையில் திட்டமிட்டபடி வரிசையாக ஆட்களைக் கைகோத்து நிற்க வைக்க முடியவில்லை எனில் தி.மு.க.வின் சென்னை மாவட்டச் செயலர் டி..ஆர். பாலு என்ன செய்து கொண்டிருந்தார்? வெட்கக்கேடு!

*** எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.**

**? கிரிக்கெட் கோப்பைகளை வென்றால் குருவாயூரப்பனுக்கு வெள்ளித் தட்டு காணிக்கை அளிக்கவிருக்கிறாராமே, ஸ்ரீகாந்த்?**

! வென்றால் அல்ல; சங்கு வைக்கும் தட்டு மிகப் பழசாகி விட்டதால் ஏற்கெனவே புதிதாகச் செய்து கொடுத்து விட்டார்! வெற்றிச் சங்கு ஊத முடிந்தால் மேலும் காணிக்கைகள் செலுத்துவார்.

*** கே. ஷகிலாபானு மொய்தீன், சென்னை — 52 ***

**? பிலிப்பைன்ஸ் முந்நாள் அதிபர் மார்க்கோஸின் உடலடக்கப் பிரச்னையில் இந்நாள் அதிபர் அகினோவின் தீர்ப்பு குறித்து...?**

! அவர் தீர்ப்பு சரியானது என்பதே என் கணிப்பு. என் தாய்நாட்டைச் சுரண்டி, மக்களை ஏமாற்றி, அயல்நாட்டில் செல்வம் குவிக்கிற தேசத்துரோகிக்கு என் தாய் நாட்டில் உடல் அடக்கமாகக் கூட உரிமை இல்லை என்பதே என் கருத்து.

*** சம்பை. சிவ. சண்முகம், சீர்காழி.**

**? தங்களை சமீபத்தில் அதிர்ச்சிக்குள்ளாக்கிய சம்பவம்?**

! ராஜீவுக்கு பிறந்த நாள் வாழ்த்துக் கூற அவர் இல்லத்துக்கு வந்தார் குடியரசுத் தலைவர். அவர் கார் வாசலில் நிறுத்தப் பட்டது. கண்ணாடிகளை இறக்கச் செய்து, செக்யூரிட்டி என்ற முறையில் உட்புறத்தை ஆராய்ந்து பார்த்த பிறகுதான் மேலே செல்ல அனுமதித்தார்களாம்!

*** எம். நாகபேச்சியப்பன், திருச்சி.**

**? மொரார்ஜி தேசாய் கேஸ் தோற்று விட்டதே?**

! அவதூறு வழக்கில் இரு அம்சங்கள் உண்டு. அவதூறு என்று நிரூபிக்கப்படுவது ஒன்று. அந்த அவதூறு உள்நோக்கத்துடன் வேண்டுமென்றே சுமத்தப்பட்டது என்று நிரூபிப்பது மற்றொன்று. இரண்டாவது அம்சத்தில் தப்பித்துக் கொண்டார் நூலாசிரியர். என்றாலும் பத்திரிகைச் சுதந்திரம் கருத்துச் சுதந்திரம் இவற்றைப் பாதுகாப்பதில் அமெரிக்க மக்களும் நீதிமன்றங்களும் காட்டுகின்ற அக்கறையைத் தனி மனிதனுக்கு அவதூறுகளால் பாதிப்பு ஏற்படாமல் பாதுகாப்பதில் காட்டுவதில்லை என்பதாகத்தான் நாம் தீர்ப்பளிக்க வேண்டியிருக்கிறது.

*** கே. பிரதாப் சிங், அரகண்டநல்லூர்.**

**? அவரை, கத்தரி, முருங்கை, முள்ளங்கி இவற்றில் சாம்பாருக்குச் சுவை கூட்டுவது எது?**

! அவரையும் கத்தரியும் அடக்கமானவை. அவை சாம்பாரினால் மணம் பெற்றுச் சிறக்கின்றன. சாம்பாருக்கே மணம் ஊட்ட வல்லவை முருங்கை, முள்ளங்கி. இவற்றுள் முள்ளங்கி வாசனை தூக்கல். சிலருக்குப் பிடிக்கக் கூடச் செய்யாது. மிச்சமிருப்பது மிதமான நறுமணமூட்டும் முருங்கை. வேறு பொய்க் கற்பனைகளுக்குப் போகாமலிருந்தால் என் வோட்டு முருங்கைக்கே!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:
கே. ஷகிலாபானு மொய்தீன்,
3A, தர்கா தெரு,
ரெட்ஹில்ஸ்,
சென்னை — 52.

# இரண்டாவது சூரியன்

12

"ஆங்கிலமா, தமிழா? எதில் பேசலாம்' என்று கடவுள் வாழ்த்துக்கு முன்பு உள்ளுக்குள் ஓர் ஊசலாட்டம் இருந்தது. நீராரும் கடலுடுத்த என்று குழந்தைகள் பாடத் துவங்கியதும் தமிழ்தான் என்று முடிவாயிற்று.

'குழந்தைகளே!' என்று ஆரம்பித்ததும் பேச வந்தது அத்தனையும் மறந்து போய்ச் சட்டென்று ஒரு வெறுமை நின்றது.

பானுமதி குழந்தைகளை ஏறெடுத்துப் பார்த்தாள். எல்லாம் ஹைஸ்கூல் மாணவிகள் உதடும் க ன் ன மு ம் கனிந்து, பெண்மை என்ற தகுதிக்கு நெருங்கி நிற்பவை. எல்லோர் கண்களிலும் சின்ன மிரட்சி இருந்தது. கொஞ்சம் கர்வமிருந்தது. கொஞ்சம் அலட்சியமிருந்தது. "குழந்தைகளே, நீங்கள் எல்லோரும் இந்தப் பள்ளிக்குப் படிக்க வந்திருக்கிறீர்கள். எதற்காகப் படிக்க வந்திருக்கிறீர்கள் என்று தெரியுமா உங்களுக்கு?"

கேள்வி கேட்டு விட்டு, பானுமதி கூட்டம் மொத்தமும் உற்றுப் பார்த்தாள்.

இதென்ன கேள்வி என்பது போல் சில ஏறிட்டுப் பார்த்தன. எனக்குத் தெரியும் என்பது போல் ஒன்றிரண்டு கை உயர்த்தி இழுத்துக் கொண்டன.

"யாராவது சொல்லுங்கள் பார்க்கலாம். நீ சொல்..." — மூன்றாவது வரிசைப் பெண் பார்த்துக் கை நீட்டினாள். மிரண்டு உடனே அது வெட்கப்பட்டது.

"சொல்... உனக்குத் தோன்றுவதைச் சொல்."

"வீட்ல படிக்க அனுப்பறாங்க. அதான்."

"இல்லேன்னா படிக்க மாட்டியா?"

குழந்தைகள் சிரித்தன. அது மேலும் வெட்கமுற்றது. 'நீ சொல்' வேறு வரிசைப் பெண்ணைக் கை காட்டினாள்.

"நல்லாப் படிச்சாத்தான் வேலை கிடைக்கும். நிறைய சம்பாதிக்கலாம்."

"வேலைல சேர்றதுக்குப் படிக்கிறியா.

பாலகுமாரன்



சிவபுரம், பிரேமபுரம், பிரளய முத்து, திரிமூர்த்திவாசம், காமபீடம், சகந்நாரம், சகல சித்தி, கச்சி, தபோமயம், கன்னி காப்பு, தண்டகபுரம், துண்டிர புரம் — இவை அனைத்தும் ஓர் ஊருக்கு வைக்கப்பட்ட காரணப் பெயர்கள்! ஊர் என்னவென்று உங்களால் ஊகிக்க முடிகிறதா?

(விடை ..... 47 ஆம் பக்கம்)

வேறே எதுக்கும் இல்லையா.''

வேற எதுக்கு என்று அந்தப் பெண் யோசித்தது.

''வேறே யாராவது சொல்லுங்க.''

''பெண்கள் படித்தால்தான் நாடு முன்னேறும். ஒரு பெண் கை உயர்த்திக் குரல் கொடுத்தது.

''எப்படி?''

''ஆணுக்குப் பெண் சமமாகத் திகழ முடியும்.''

''ஏன் நாம் ஆணுக்குச் சமமாகத் திகழ வேண்டும்?''

''பொருளாதாரப் பிரச்னையைச் சமாளிக்க.''

''அதற்கு மட்டும்தானா என் தோழி?''

தோழி என்கிற விளிப்பு, குழந்தைகளுக்குச் சந்தோஷம் கொடுத்திருக்க வேண்டும். பற்கள் பளிச்சிட ஒன்றையொன்று பார்த்துக் கொண்டன.

''இதென்னடி வந்ததும் வராததுமா இப்படி போட்டு அறுக்கறா?'' — யாரோ ஓர் ஆசிரியை சக டீச்சரிடம் முணுமுணுத்தாள். ஹெச். எம். பானுமதியையும், குழந்தைகளையும் கூர்மையுடன் கவனித்துக் கொண்டிருந்தாள்.

''பொருளாதாரப் பிரச்னைக்கு மட்டுமா படிப்பு — படிப்புக்குப் பிறகு வேலை என்று நினைக்கிறீர்கள்...?''

''என் குழந்தைகளை நல்ல முறையில் வளர்ப்பதற்கு.''

குபீரென்று சிரிப்பு கிளம்பிற்று. பேசின பெண்ணுக்கு முதுகில் பொத்துப் பொத்தென்று அடிகள் விழுந்தன.

'ஐயோ! ச்சீ!' என்று சில பெண்கள் நெளிந்தன. ஒரே விநாடியில் ஒரே பதிலால் சகலரும் உதடு கடித்து வெட்கி என்னென்னவோ நினைத்துச் சகலமும் நெளிந்தன. கண்கள் சொருக, முகம் பொத்தி, வாய் அழுத்திக் கிளுகிளுத்தன.

'என்ன கனா! எவ்வளவு கனா!' — பானுமதி வியந்தாள். குடும்பம் என்கிற விஷயம் பெண்ணுக்கு எத்தனை கிறக்கம்! எவ்வளவு சந்தோஷம்! எத்தனை பட்டும் இது ஏன் இப்படி இதற்கு மயங்கிப் போய் விடுகிறது. இத்தனை பெண்களுக்கும் திருமணம் ஆகும். எவனோ ஓர் ஆணோடு விரல் கோத்து மனசு மயங்கி மடியில் கிடக்கும். எடுத்துக் கொள் என்னை என்று ஏங்கும்.

ஆனால் மயக்கமும் ஏக்கமும்தானா வாழ்க்கை! இதில் யாரெல்லாம் அடிபடப் போகிறீர்கள்? கடவுளே! இங்கே எவருக்கும் அந்த வேதனை வேண்டாம் — உள்ளே மனசு கை கூப்பிற்று.

''தேர் ஹூ ஆர்... யாரது கை உயர்த்திய பெண்?''

இடது கையால் முகம் பொத்தி, வலது கை தூக்கிற்று. மறுபடி சிரிப்பு பரவிற்று.

''கிவ் ஹர் எ பிக் ஹாண்ட். ஷி ஸ் ரைட்'' குழந்தைகள் கை தட்டினார்கள். அதிலும் கேலி இருந்தது. பதில் சொன்னவள் உதடு கடித்துத் தலை குனிந்து வெட்கினாள்.

''வெட்கப்படத் தேவையில்லை தோழி. உன் பதில் மிகச் சரியானது. நூற்றுக்கு நூறு உண்மை. இங்கே நீங்கள் படிக்க வந்திருப்பது அடுத்த தலைமுறைக்கு — அதாவது உங்கள் குழந்தைகளுக்குப் பலம் தர. அறிவு பலமும், ஆன்ம பலமும் தரவே இப்போது நீங்கள் படிக்கிறீர்கள். படிப்பறிவில்லாததால் ஆன்ம பலம் அறிவு பலம் தர முடியாதா? தரலாம். படித்தவள் இன்னும் அதிகம் தர முடியும். நமது குழந்தைகளை — நமது சந்ததியினரை — நாம் நல்வழிக்கு, நம் படிப்பால், அறிவால் திருப்ப முடியும். ஆனால் தோழி, வெறும் படிப்பு மட்டும் போதாது. ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவுமா? ஒரு தோழி சொன்னது போல் பொருளாதார வசதிக்கு, உயர்வுக்கு, ஒரு வேலைக்கு இது பயன்படலாம். படிப்பு உண்மையில் நமக்கு என்ன தர வேண்டும் தெரியுமா? — கேள்வியை... எது குறித்தும் நமக்குக் கேள்வி வர வேண்டும்!

''ஏன் இப்படி? எதனால்? என்று கேள்வி வர வேண்டும். நான் யார்? என் தகுதிகள் என்ன, என் உடைமைகள் என்ன, நான் யாருக்கும் அடிமையா, எவருக்கும் தாதியா, பெண் என்றால் எல்லாம் கேட்டுக் கொண்டு பொறுமையாக இருக்க வேண்டுமா; எவருடைய விருப்பத்துக்கேனும் ஆட்பட வேண்டுமா; இங்கே என் நிலை என்ன? என்கிற கேள்வியை உங்கள் படிப்பு உங்களுக்குத் தர வேண்டும்.

''அடிமை அடிமையைத் தான் வளர்க்க முடியுமே தவிர, அன்புள்ளவர்களை வளர்க்க முடியாது.

''ஆகவே உங்கள் படிப்பு உங்களை அறியச் செய்ய வேண்டும். 'நான் அடிமையா...? யாருக்கும் அடங்கி நடக்கப் பிறந்தவளா?' என்று புரிந்து கொள்ள வேண்டும். பெண் யாருக்கேனும் அடிமை

யாய் இருக்க வேண்டும் என்கிற நியதி உண்டா? ஆர் வி ஸ்லேவ்ஸ்?'' — கேள்வி கேட்டு அமைதியானாள்.

குழந்தைகள் ஆச்சரியத்துடன் பானுமதியைப் பார்த்தன.

''இல்லை! ஒரு நாளும் பெண் என்பவள் அடிமை இல்லை! அது பழங்காலம். எவருக்கும், எந்நாளும், எதன் பொருட்டும் அடிமையில்லை என்பதை உணருங்கள். உங்கள் உணர்வு, உங்கள் மதிப்பு, உங்கள் இருப்பு மதிக்கப்படவில்லையெனில், மதிக்கப்படும்படி நீங்கள் உணர்த்தவில்லையெனில் இந்தப் படிப்பு பாழ் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

''துரதிருஷ்டவசமாய் இன்று பெண்கள் வாழ்க்கை அப்படி இல்லை. சகலத்துக்கும் பயந்து பயந்து வாழுகிற பிராணிகளாய், ஆடு மாடுகளாய் இருக்கிறோம். ஆண் உயர்வு, பெண் இரண்டாவது என்று பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறோம். தவறு! ஆணும் பெண்ணும் சமம். எல்லா இடத்திலும், எல்லா உணர்விலும் சமம். இது மறுக்கப்பட்டால் சீறி எழு! தவறு எனில் தட்டிக் கேள். இல்லை.. இதுதான் சரி எனில் எப்படி என்று கேள்.

''உண்மை உனக்குத் தெரியும் வரை கேள். உனக்குள் கேட்டுக் கொள். உலகத்தோரைக் கேட்டு யோசி. உன் படிப்பு, படிப்பு சொல்லித் தர மட்டுமில்லை. கேள்வி கேட்கவே படிக்கிறாய்.

''உனக்கு விடுதலை என்ன என்பதை நான் சொல்லித் தருவதை விட, நீயே கேட்டுத் தெரிவது நல்லது. யோசி. உனக்குச் சரியான பதில் கிடைக்கும் வரை யோசி. யோசிக்கும் பலத்தைத் தருவதே படிப்பு. டீச்சர் சொன்னாள் என்பதற்காக அல்ல — நீயே உன்னை, உன் நிலையைப் புரிந்து கொள்ள, யோசிக்கப் பழகு.

''யோசிப்பு என்பது சுயசிந்தனை. சுய பலம், சுய சிந்தனையும் சுய பலமுமே சுதந்திரம். உங்கள் மனசு சுதந்திரம் பெற என் வாழ்த்துக்கள்.''

**ச**ட்டென்று ஓர் அமைதி அங்கே வந்தது. குழந்தைகள் கைதட்டக் கூட தோன்றாமல் பானுமதி பேச்சில் உறைந்து கிடந்தார்கள். புரிந்தும் புரியாமலும் விழித்தார்கள்.

எங்கோ பின்னால் ஒரு கை தட்டல் ஆரம்பித்து வெகு நேரம் குழந்தைகள் கை தட்டினார்கள்.

'கிழிஞ்சது போ. ஏற்கெனவே ஒவ்வொண்ணும் தத்தாரி. இதுகளுக்கு இப்படி ஏத்தி விட்டா இஷ்டத்துக்கு ஆடும். ஏய் இவளே...! டீச்சருக்கு அடங்கணுமா வேண்டாமான்னு கேளு'' — சுவரோரம் நின்றிருந்த ஒரு வயதான டீச்சர் அருகே இருந்த பெண்ணைத் தூண்டி விட்டாள்.

அது மிரண்டது.

''மத்த நேரம் வாயாடறல்ல. கேளேண்டி இப்ப...''

''டீச்சர், ஒரு கேள்வி.''

''யெஸ்...''

''டீச்சருக்கு அடங்கணுமா வேண்டாமா?''

குரல் வந்த இடத்தில் வயதான டீச்சர் நெளிந்து கொண்டிருந்தாள். இது குழந்தைகள் கேள்வி இல்லை என்பது பானுமதிக்குப் புரிந்தது.

''வேண்டாம்.''

குழந்தைகள் சலசலத்தனர்.

''நீ என் அடிமையில்லை. உன்னை அதட்டவோ அடிக்கவோ நான் முற்படமாட்டேன். உன்னைத் தோழி என்று தானே கூப்பிட்டேன். எனக்கு கெமிஸ்ட்ரி தெரியும். என்னிடம் நீ கற்றுக் கொள்ளப் போகிறாய். அவ்வளவுதான். இதனாலேயே நீ எனக்கு அடிமை என்றில்லை. உனக்குக் கற்றுக் கொடுக்கத்தான் நான் பயிற்சி பெற்றிருக்கிறேன். உன்னை அடக்க நினைத்தால் அது என் அறியாமை அல்லது அகம்பாவம். உன் மீது நான் அன்பும் அக்கறையும் காட்டினால் பதிலுக்கு நீ என்ன செய்வாய்?''

''அதே அன்பும் அக்கறையும் காட்டுவேன்...''

''உன்னைச் சதா மிரட்டிக் கொண்டிருந்தால்...''

''வெறுப்பும் அலட்சியமும்''

''அவ்வளவே! வீ ஆர் ஃப்ரெண்ட்ஸ்.''

**எ**ல்லோருடைய அன்பையும் ஒட்டுமொத்தமாய்ச் சம்பாதிப்பது இங்கே இயல்பில்லை. யார் மீதாவது அன்பு செலுத்த, யாரோ வெறுக்கத் துவங்கி விடுகிறார்கள்.

பள்ளிக் கூடத்தில் பானுமதியை வெறுக்க உடனே சிலர் தயாரானார்கள். தயாரானவர்களுக்கு வயது அதிகமாய் இருந்தது. அனுபவம் குறைவாய் இருந்தது.

பானுமதி நைன்த் ஸ்டாண்டர்ட் பி செக்ஷனுக்குள் நுழைந்தாள். குழந்தைகள் எழுந்து நின்று 'குட்மார்னிங் மிஸ்' என்றன.



**ஒரு விதையை விதைக்காமல், ஒரு செங்கல்லை எடுத்து வைக்காமல், ஒரு துணியை நெய்யாமல், அரசியலை மட்டுமே தொழிலாகக் கொண்டவன் தேசத்திற்குப் பேராபத்தைக் கொண்டு வருகின்றான்.**

**— கலீல் ஜிப்ரான்.**

**தகவல்: ராதேவ்.**

''வெரி குட்மார்னிங்'' — கையமர்த்தினாள்.

''உட்காருங்கள்,'' என்றாள்.

சப்தம் எழக் குழந்தைகள் உட்கார்ந்தன.

அட்டென்டென்ஸ் ரிஜிஸ்டர் புரட்டினாள். அகல்யா, அனிதா, அஸ்வினி.. பானுமதி..

சர்க்கரைக் கட்டிகள் மாதிரி பெயர்கள் வாயில் கரைந்தன. கவிதை மாதிரி நீண்டன. ஸரீனா வகாப்பில் கவிதை முடிந்தது.

''ஹலோ... நான்தான் உங்க டீச்சர். ஒரு இரண்டு மாதங்களுக்கு இனிமே முதல் கிளாஸ் கெமிஸ்ட்ரி. ஓ.கே..?''

''ஓ.கே. டீச்சர்.''

''இப்ப அட்டென்டென்ஸில் வந்த பேர் யார் யாருக்குன்னு பார்க்கணும். இடது கோடிலேர்ந்து ஆரம்பிக்கலாமா?''

அறிமுகம் நடந்தது. தன் பெயரும், தகப்பனார் பெயரும் அவர் உத்தியோகமும் சொன்னார்கள்.

''மிஸ், ஒரு கேள்வி...''

''கேளு.''

''நீங்க நிஜமாவே எங்களுக்கு ஃப்ரெண்டா?''

''யெஸ்.''

''அப்ப... நாங்க கிளாஸ்ல பேசினா?''

''பேசாதீங்கம்மான்னு சொல்வேன். அன்பா சொன்னா உங்களால் கேட்காம இருக்க முடியுமா?''

''ஹோம் ஒர்க் பண்ணலைன்னா?''

''அநேகமா கெமிஸ்ட்ரில ஹோம்வொர்க் தர மாட்டேன்.''

ஹோவென்று குழந்தைகள் கைதட்டின.

''ஆனா வாரா வாரம் டெஸ்ட் வைப்பேன் — எவ்ரி தர்ஸ்டே டெஸ்ட்.''

''நோ...'' — குழந்தைகள் குரல் உயர்த்தினார்கள்.

''ஏன் பயப்படறீங்க? டெஸ்ட்ங்கறது உங்களுக்குப் பாடம் புரிஞ்சுதான்னு பார்க்கத்தானே.. யாரு கிளாஸ் லீடர்?''

தெய்வீகராணி எழுந்து நின்றது.

''எந்த மிஸ் செலக்ட் பண்ணினாங்க?''

''சாவித்திரி மிஸ்.''

''சரி இனிமே ஒவ்வொரு வாரமும் ஒவ்வொருத்தர் லீடர். முதல் லீடர் அகல்யா.''

வகுப்பு சிரித்தது.

''அது சரியான மக்கு, டீச்சர்.''

''நோ, ஷி ஸ் நாட்!''

''கணக்குல முட்டை வாங்குவா!''

''பரவாயில்லை. நான் சொல்லித் தரேன். அகல்யா இங்கே வா. போர்ட்ல இன்னிக்கு டேட் எழுது. கிளாஸ் ரூம் ஏன் பெருக்கலை?''

''ஆயா வர்றதில்லை மிஸ்.''

''நம்ம வகுப்புக்கு நாமதான் ஆயா. போ. போய் கேம்ஸ் ரூம்லேர்ந்து துடைப்பம் வாங்கிட்டு வா.''

மடமடவென்று பெருக்கினார்கள். ஜன்னல்களை ஒட்டடை அடித்தார்கள்.

''யார் நல்லா படம் வரைவீங்க?''

''அனிதா, ஸரீன்... தனபாக்கியம், விமலா'' — பெயர்கள் கூச்சலாய் எழுந்தன.

''நாலு பேரும் நாலு ஸீனரி வரைஞ்சிட்டு வாங்க. கலர் பெயிண்டிங் அல்லது கிரேயான்ஸ் போடுங்க...'' நாளைலேர்ந்து கிளாஸுக்கு வந்ததும் ஒரு அஞ்சு நிமிஷம் சைலண்டா இருக்கணும். நான் ஒரு மந்திரம் சொல்லித் தருவேன். காதுல சொல்வேன். எல்லோரும் அதை மனசுக்குள்ள உதடு பிரிக்காத ஒரே ஸ்பீட்ல சொல்லணும். தனித் தனியே காதில் ஒரு வார்த்தை சொன்னாள். நேரே உட்காரச் சொன்னாள். கண் மூடச் சொன்னாள். 'ஸ்டார்ட்' என்றாள். குழந்தைகள் அமைதியானார்கள். தங்களுக்குள்ளே மூழ்கினார்கள்.

''எனக்கு நாலு பசங்க வேணும். ஹால் க்ளீன் பண்ண.'' எதிர்த்துப் பேசிய ஆங்கில ஆசிரியை வர, பானுமதி 'உஸ்'ஸென்று அதட்டினாள்.

''என்ன நடக்கிறது இங்கே?''

பானுமதி பதில் சொல்லவில்லை.

யாகம் நடத்தினால் கலைப்பதற்கு ராட்சஸர்கள் வருவார்களாம். மனசுதான் யாகக் குண்டம். புத்திதான் ராட்சஸன், புத்திதான் ராமன். எப்போது ராட்சஸன், எப்போது ராமன் என்றுதான் அனுமானிக்க முடியவில்லை!

(தொடரும்)



''ஆபீஸ்ல மாட்டற மாதிரி ஏதாவது கடிகாரம் இருக்கா?''

''எந்த மாதிரி கடிகாரம் வேணும் உங்களுக்கு?''

''காலையில பத்து மணி வரைக்கும் 'ஸ்லோ'வாவும், பிறகு சாயந்திரம் ஐந்து மணி வரைக்கும் ஃபாஸ்டாவும் ஓடற மாதிரி இருக்கணும்!''

— சீர்காழி ஸ்ரீராம்.

பண்டிகைக்
காலங்களில்
போதுமான
மகிழ்ச்சி
கிடைப்பதில்லை
என்று யார்
சொன்னது?

கொண்டாடி மகிழுங்கள்
"ஸ்டாண்டர்டு"
பட்டாசுகளுடன்

ஸ்டாண்டர்டு

ஃபையர்வர்க்ஸ்

# என்.டி.ஆரின் அபூர்வ

அன்று காலை ஹைதராபாத் நாம் பள்ளி ரயில் நிலையம் திடீரென்று பெரும் பரபரப்பிற்கு உள்ளாயிற்று. காவி உடையில் என்.டி.ஆர். ரயிலிலிருந்து இறங்கித் தனியாக — எந்தவிதமான பாதுகாப்புகளும் இன்றி, சராசரி மனிதனாகப் பிளாட்பாரம் தாண்டி நடந்து போய்க் கொண்டிருந்தார்... அவ்வளவுதான்! சற்று நேரத்திற்குள் மிகப் பெரிய ஜனக் கும்பல் அவரைச் சூழ்ந்து கொண்டது! ஆட்டோ ரிக்ஷா ஓட்டுனர்கள், போர்ட்டர்கள், பயணிகள் என்று எல்லோருமே என்.டி. ராமாராவை நேரில் பார்த்து விட்ட குதூகலத்தில் "ராமாராவ் காரு... ராமாராவ் காரு..." என்று கூச்சலிட்டபடி பளிச் பளிச்சென்று அவரது காலில் விழுந்தனர். சிலர் சற்று நாகரிகம் கருதி கை உயர்த்திக் கும்பிட்டனர்! சற்று நேரத்திற்குள் டிராஃபிக் சுத்தமாய் 'ஜாம்' ஆயிற்று! போலீஸ் வந்து குவிந்தது!

"நேனு ராமாராவ் காரு காது! நேனு ராமாராவ் காது..." (நான் ராமாராவ் இல்லை...) — அந்தக் காவி உடைக்காரர் தெலுங்கிலும் தமிழிலும் மாறி மாறிக் கூட்டம் பார்த்துக் கூவினார். போலீஸுக்கும் ஒன்றும் புரியவில்லை. மிகுந்த சிரமப்பட்டு அவரைக் கூட்டத்திலிருந்து பிரித்தெடுத்தனர். தனியாய் ஒரு அறைக்கு அவரை அழைத்துக் கொண்டு போய், சற்று கலவரத்துடன் அவரை விசாரித்தனர்.



இந்தச் சம்பவம் நடப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னால் ஹைதராபாத் தலைமைச் செயலகத்திலிருந்து, ஆந்திர முதல்வர் என்.டி.ஆரின் உதவியாளர், சென்னை மைலாப்பூர் கற்பகம் ஹோட்டல் உரிமையாளர் செல்வ கணபதியுடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். "உங்கள் ஹோட்டலில் பணிபுரியும் வஜ்ரம் என்பவர், தாம் என்.டி.ஆர். போல் இருப்பதாகக் கடிதம் எழுதி அத்துடன் தமது புகைப் படம் ஒன்றினையும் இணைத்தனுப்பியிருக்கிறார். இது முதல்வரின் பார்வைக்குப் போனது. எனவே வஜ்ரம் அவர்களை என்.டி.ஆர். சந்திக்க விரும்புகின்றார். உடனே கிளம்பி வரச் சொல்லுங்கள்" என்றார்.

செல்வ கணபதிக்குக் கை கால் ஓடவில்லை. மறுநாளே டிக்கெட் எடுத்து வஜ்ரத்தை ஹைதராபாத்திற்கு அனுப்பினார்.

ரயில்வே ஸ்டேஷனில் பரபரப்பை ஏற்படுத்திய காவி உடைக்காரர்தான் இந்த வஜ்ரம்! முழு விவரங்களை வஜ்ரம் போலீஸிடம் சொன்ன பிறகு

# சகோதரர்!

தான் போலீஸுக்கே நிம்மதியாயிற்று! அவர்கள் என்.டி.ஆர். அலுவலகத்துடன் தொடர்பு கொண்ட இருபது நிமிடங்களில் என்.டி.ஆரின் 9999 ஒயிட் அம்பாசிடர் கார் ரயில்வே ஸ்டேஷனுக்கே வந்து விட்டது. வஜ்ரம், நாச்சாரம் ராமகிருஷ்ணா சினி ஸ்டுடியோவிற்கு அழைத்துச் செல்லப் பட்டார்.

ஸ்டுடியோவில் நீளமான தாடி... கமண்டலம்... கழுத்தில் உத்திராட்சக் கொட்டை மாலை சகிதம் என்.டி. ராமாராவ்! வஜ்ரம் ராமாராவை வணங்கினார். பதிலுக்கு அவர் வஜ்ரத்தை மார்புடன் சேர்த்துக் கட்டிக் கொண்டு தன் அன்பை வெளிப்படுத்தினார்.

"நான் அப்படியே அச்சாக உங்களைப் போல் இருப்பதால் ஜனங்கள் என்னை என்.டி.ஆர். என்றே அழைக்கிறார்கள். என்னை உங்கள் சகோதரர் என்று கூடச் சிலர் நம்புகின்றார்கள். என் காலில் வந்து விழுந்து விடுகிறார்கள்." வஜ்ரம் உணர்ச்சி மேலிட என்.டி.ஆரிடம் கூறினார்.

"நல்லது! நான் கூட உங்களைப் பார்த்ததும் அசந்து போய் விட்டேன். அவர்களின் அபிப்பிராயத்தில் தப்பில்லை. நிஜமாகவே நீங்கள் என்னைப் போல்தான் இருக்கிறீர்கள்" என்று கூறி, முதல்வர் என்.டி.ஆர். 'விஸ்வாமித்திரர்' பட யூனிட்டைச் சார்ந்தவர்களுக்கு வஜ்ரத்தை அறிமுகப்படுத்தினார்.

'விஸ்வாமித்திரர்' படத்தில் சில காட்சிகளில் என்.டி.ஆருக்குப் பதில் டூப்பாக வஜ்ரத்தை நடிக்க வைத்தார்கள். அதன் பின் வஜ்ரத்துக்கு ராஜ மரியாதைதான்! தனி ஏஸி ரூம்! வெளியே சென்று வர ஏசி கார். இருபது நாட்கள் ஏறக்குறைய சொர்க்கத்தில்தான் இருந்தார். ஷெட்டியூல் முடிந்ததும், 'தேவைப்பட்டால் சொல்லி அனுப்புகிறேன்' என்று அன்புடன் கூறி, என். டி. ஆர். வஜ்ரத்தைச் சென்னைக்கு அனுப்பி வைத்தார்.

**செ**ன்னை வந்த வஜ்ரத்தை மிகப் பெரிய அதிர்ஷ்டம் வரவேற்றது! அது பத்மால்யா பிக்சர்ஸின் 'கலியுக விஸ்வாமித்திரர்' என்ற படத்தில் முதலமைச்சராக நடிக்க வந்த வாய்ப்பு!

லட்சக்கணக்கில் சம்பளம் தருவதாகச் சொல்லவே வஜ்ரம் ஒப்புக் கொண்டார். படத்தின் தயாரிப்பாளர் சூரிய நாராயண ராவ், பட டைரக்டர் ஆகியோர் முந்நிலையில் தியாகராய நகரில் 'கால்ஷீட்' மற்றும் சம்பள ஒப்பந்தங்கள் கையெழுத்தானதும் பெங்களூரில் படப்பிடிப்புக்குப் பறந்து சென்றார்கள்.

**பெ**ங்களூர் பக்கத்தில் பெரிய காடு! அந்தக் காட்டுக்குள் சில தீவிரவாதிகள் சேர்ந்து முதலமைச்சரைக் கடத்திக்கொண்டு வருகிறார்கள். காவி உடை! அதற்கு மேல் அகலமான சால்வை, சற்று ஏறிய நெற்றியில் திருநீருக் கீற்று. நடுவில் சின்ன நிலா மாதிரி குங்குமப் பொட்டு சகிதம் அந்த முதலமைச்சரை கரடு முரடு பார்க்காமல் மண் தரையில் பரபரவென்று இழுத்து வருகின்றார்கள்! அந்த முதலமைச்சரின் உடம்பெல்லாம் ஒரே ரத்தக் காயங்கள். காவி உடை சுக்குநூறாய்க் கிழிந்து போகிறது! வலி தாங்காது அவர் இடுகின்ற பெருங் கூச்சல் அந்தக் காடு முழுவதும் எதிரொலிக்கின்றது! ஒருவன் முதலமைச்சரின் வாயில் தான் சுவைத்துக் கொண்டிருந்த பீடியை எடுத்து வைக்கின்றான். தடிமனாய் இருந்த ஒரு தாடிக்காரன், "மேனகையைக் கடத்திட்டு வந்து என்னென்னலாம் பண்ணினேடா?" என்று முதலமைச்சரிடம் கேட்கின்றான். உடனே அவர் தலையில் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு, "என்னை விட்டுடுங்கள்.. ப்ளீஸ்... என்னை விட்டுடுங்கள்.." என்று ஒவ்வொருவரின் காலையும் தொட்டு வணங்குகிறார். சுற்றி நின்று கொண்டு அந்தத் தீவிரவாதிகள் அட்டகாசமாகச் சிரிக்கின்றனர்.

— "கட்! ஷாட் ஓ.கே!"

**அ**ன்று எடுக்கப்பட்ட காட்சி இவ்வளவுதான். முதலமைச்சராக நடித்த வஜ்ரம் தொடர்ந்து என்னால் இப்படியெல்லாம் நடிக்க முடியாது என்று மறுநாளே தயாரிப்பாளரிடம் திட்டவட்டமாகக் கூறி விட்டார். இது குரூரம்! என்.டி.ஆரின் வீட்டில் சாப்பிட்ட கையின் ஈரம் கூட இன்னும் உலரவில்லை. அதற்குள் அவரைத் தாக்கி அவரின் எதிராளிகள் எடுக்கும்

"என்ன சார்... பகல்ல 'லைட்' இல்லாம வர்றதுக்குப் போய்ப் பிடிக்கிறீங்க...?"

"ரொம்பப் பணக்கஷ்டம். தீபாவளிச் செலவுக்கு என்ன பண்றதுன்னே தெரியலை..."

— புதூர் அ. முருகன்.



படத்தில் நடிப்பதா? பணமா முக்கியம்! மனுஷன் எத்தனை நெகிழ்ச்சியுடன் நெஞ்சோடு கட்டிக் கொண்டார்! 'நாம் இருவரும் உருவத்தில் ஒன்றாக இருப்பதால் உடன் பிறவாச் சகோதரர்களாகவே இருப்போம்' என்றார். கடவுளே! இது எத்தனை பெரிய வார்த்தை! அத்தனை பெரிய வார்த்தை சொன்ன மனுஷனைத் தாக்கி எடுக்கின்ற படத்தில் நான் நடிக்கலாமா? வஜ்ரத்தின் மனம் உடைந்தது!

ராஜீவ் காந்தியிடம் உன்னை அறிமுகப் படுத்துகின்றேன். கத்தை கத்தையாய்க் கரன்ஸி தருகின்றேன் என்று யூனிட்காரர்கள் சொன்ன ஆசை வார்த்தைகளையெல்லாம் உதறி விட்டுச் சென்னைக்கு ஓடோடி வந்து விட்டார் வஜ்ரம். அவர்களைப் பொருத்தமட்டில் வஜ்ரத்தை முதலமைச்சராகப் போட்டு எடுத்த எத்தனையோ அடிகள் படச் சுருள் இனி நாசம்!

இத்தனை பரபரப்பை ஏற்படுத்திய அந்த விநோத மனிதர் வஜ்ரம் அவர்களை, கற்பகம் ஹோட்டலில் சந்தித்தோம். அவருக்கு ஹோட்டலில் மேற்பார்வை இடுவதுதான் வேலையாம். சாப்பிட வருகின்றவர்கள் பலர் அவரின் காலைத் தொட்டு வணங்கி ஆசிர்வாதம் கேட்கின்றார்கள். அந்தக் கண்கொள்ளாக் காட்சியை(?) நாங்களும் பார்த்தோம். உடையில் மட்டுமல்ல நடை, செய்கை எல்லாம் உரித்து வைத்தது மாதிரி என்.டி.ஆர்.தான்!

"நான் என்.டி.ஆரை விட ஆறு வயது மூத்தவன். எல்லோரும் என்னை என்.டி.ஆர். என்றே அழைப்பதால் எனக்கு என்.டி.ஆர். மீது பக்தி உண்டாயிற்று! அந்தப் பக்தியின் காரணமாய் அவரைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாயிற்று. ஜனங்கள் எல்லாம் என்னிடம் ஆசீர்வாதம் கேட்கின்றார்கள். எழுபத்தி எட்டு வயதுக்காரன் ஆசீர்வாதம் பண்ணுவதில் தப்பில்லை! என்று நானும் செய்கிறேன். மற்றபடி எல்லாம் அந்தப் பகவான் செயல்" என்று வானம் பார்த்துக் கைகூப்பினார் வஜ்ரம்.

— பாரதிபாலன்

அட்டை வண்ணப்படம் மற்றும் புகைப்படம்: ஸ்ரீஹரி

## அருள்வாக்கு

தேவார கர்த்தாக்களான அப்பர், ஸுந்தரர், ஸம்பந்தர், முதலானவர்களே அவற்றைப் பண் என்கிற ராகங்களில் அமைத்து ஈசுவரார்ப்பணம் செய்திருக்கிறார்கள். இசையே வடிவானவன் என்று ஈச்வரனையே பலவிதத்தில் ஸங்கீதத்தில் ஈடுபட்டவனாக வர்ணித்துமிருக்கிறார்கள். ஒரு பெரிய ட்ரெடிஷன் வேதங்களை ஸ்வரம் மாறாமல் எத்தனையோ யுகங்களாகக் காத்துக் கொடுத்து வந்திருக்கிறது என்றால், தமிழ்நாட்டுக்கு ஒரு பெருமையாக இன்னொரு ட்ரெடிஷனில் ஓதுவா மூர்த்திகள் சுமார் 1400 வருஷங்களாகத் தேவாரப் பண்களை மூலரூபத்தில் காப்பாற்றிக் கொடுத்து வருகிறார்கள். பூஜையிலேயே நீராஜனத்துக்குப் பிறகு ஓர் அங்கமாகப் பிரதேச பாஷைப் பாட்டுக்கள் பாட வேண்டுமென்றிருக்கிறது. அந்தப்படிக் கோவில்கள்தோறும் தேவாரம் ஓதும்படியாகச் சோழ ராஜாக்கள் மான்யம் கொடுத்து இந்த இசை மரபை வளர்த்து விட்டிருக்கிறார்கள்.

திவ்யப் பிரபந்தங்களும் பண்களில் பாடப்பட்டு வந்தவைதாம்; ஆனால் பிற்பாடு இப்போது சொல்கிற மாதிரி ராகமில்லாமல் ஏதோ ஒரு பிராஸத்தில் சொல்வதாக ஆகிவிட்டது என்று சொல்லி ஆராய்ச்சியாளர்கள் சான்றுகள் காட்டுகிறார்கள். வைஷ்ணவ ஆசார்யர்கள் இந்தப் பிரபந்தங்களைத் தமிழ் வேதம் என்று கொண்டாடினால் மட்டும் போதாது: எப்படி வேதமானது முழுக்கப் பாட்டாக இல்லாமல், இரண்டு மூன்று ஸ்வரங்களில் மட்டுமே ஏறி இறங்குகிற மாதிரி ஓதப்படுகின்றதோ, கிட்டத்தட்ட அப்படித்தான் இந்தத் தமிழ் மறையையும் ஓத வேண்டுமென்றே இப்படி மாற்றி ஏற்பாடு பண்ணியிருப்பார்களோ என்னவோ?

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



# ஸ்ரீபெட் 'CLEOPATRA'

**சகல பொருட்களையும்
பத்திரப் படுத்தும்
சமையலறை ஜாடிகள்.**

இனிமேல் இல்லத்தரசிகளுக்குக் கவலையில்லை. கையில் பிடித்து உபயோகிக்க எளிதான 'கிளியோபாட்ரா' ஜாடிகள் இல்லத்தரசிக்கு மனநிறைவையும், சமையற்கட்டுக்கு அழகையும் தருகின்றன. சர்க்கரை, உப்பு, முந்திரிப்பருப்பு, தனியா, காய்ந்த மிளகாய், பூண்டு மற்றும் மிளகாய், மஞ்சள் மசாலா பொடிகளைப் பத்திரப்படுத்த மிகவும் ஏற்றவை. காபிப்பொடி, மத்தூள் ஆகியவற்றையும் வைத்துக் கொள்ள வசதியானவை. ரீபில் பாக்கெட்டுகளில் கிடைக்கும் ½ கிலோ எடையுள்ள எண்ணெய், வனஸ்பதி, மால்ட் பான வகைகள் போன்ற எதை வேண்டுமானாலும் போட்டுவைத்துக் கொள்ளலாம்.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும் கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை பளிச்சென்று காண்பிப்பவை. உடையாதவை. உணவுப் பொருட்களைப் பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும் வாய்ந்தவை. நெடியற்றவை. கனமில்லாதவை. உபயோகிக்க வசதியானவை.

60 டிகிரி சென்டிகிரேட் வரை உஷ்ணத்தைத் தாங்கக் கூடியவை.




பெட் இண்டஸ்டிரியல் கன்ஸ்யூமர்
பாக்கேஜ் பிரைவேட் லிமிடெட்,
3வது மாடி, மூகாம்பிகா காம்பிளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 73768/74960



ADWAVE/PET/3824 TAM A

# பொன்னியின் செல்வன்

அத்தியாயம் 34

## "போய் விடுங்கள்!"

"ஐயோ! பிசாசு!" என்ற பீதி நிறைந்த குரல் வந்த திசையை நோக்கி வந்தியத்தேவன் விரைந்து ஓடினான். ஓடும்போதே அவன் உள்ளத்தில் "இது மணிமேகலையின் குரல் அல்லவா? இவள் எதற்காக இந்நேரத்தில் இங்கு வந்தாள்? எதைப் பார்த்து விட்டு இப்படி அலறினாள்? பிசாசு என்பது ஒன்று இருக்க முடியாது. பின் என்னவாயிருக்கும்? குரலில் உண்மையான பயம் தொனித்ததே? அவளை இப்போது நாம் அணுகிச் செல்வதிலிருந்து ஏதாவது தொல்லை ஏற்படுமோ? அவளுடைய தமையனோ நம்மைக் கடித்துத் தின்றுவிட வேண்டுமென்றிருக்கிறான். ஆதித்த கரிகாலர் வெறி கொண்டிருக்கிறார். பழுவூர் ராணி மனத்தில் என்ன வஞ்சம் வைத்திருக்கிறாளோ, ஒன்றும் தெரியவில்லை!...." என்ற எண்ணங்கள் துரிதமாகத் தோன்றி மறைந்தன. இப்படி உள்ளத்தில் கலக்கம் இருந்தபடியால் அவன் கவனக்குறைவு அடைந்திருந்தான். திடீரென்று ஒரு பன்னீர் மரத்தின் வேர் தடுக்கித் தரையில் விழுந்தான். மேல் துணியின் தலைப்பு பக்கத்திலிருந்த பூம்புதரில் சிக்கிக் கொண்டது. விழுந்தவன் சமாளித்து எழுந்து உட்கார்ந்து அங்கவஸ்திரத்தை மெள்ள எடுக்க முயன்றான். எத்தனையோ பகைவர்களும் சதிகாரர்களும் செய்ய முடியாத காரியத்தை இந்தச் சிறிய மரத்தின் வேர் செய்து விட்டதே, நம்மைக் கீழே தள்ளி விட்டதே, இது ஏதேனும் அபசகுனத்துக்கு அறிகுறியோ, அல்லது நம்மை ஆபத்துக்கு உள்ளாக்காமல் இந்த மரவேர் தடுத்து ஆட்கொள்கிறதோ என்று எண்ணி வந்தியத்தேவன் தனக்குத்தானே புன்னகை புரிந்து கொண்டான்.

அச்சமயம், "அம்மா! அம்மா! எங்கே இருக்கிறீர்கள்?" என்ற குரல் கேட்டது. அது சந்திரமதியின் குரல்.

"இங்கேதானடி இருக்கிறேன். அல்லிக் குளத்தின் அருகில் இருக்கிறேன்! சீக்கிரம் வா!" என்றது மணிமேகலையின் குரல்.

காலடிச் சத்தங்கள் கேட்டன; காலில் அணியும் நூபுரங்களின் இனிய ஒலிகளும் கேட்டன.

அல்லிக் குளம் என்று மணிமேகலை கூறியது அந்தப் பூங்காவனத்தின் மத்தியில் செய் குன்றத்தின் அருகில் இருந்த சிறிய பளிங்குக்கல் தடாகத்தைத்தான். அந்தக் குளம் அல்லிப் பூவின் வடிவத்தில் அமைக்கப்பட்டிருந்தது. அதில் சில அல்லிக் கொடிகளும் செங்கழுநீர்க் கொடிகளும் இருந்

அமரர் கல்கி

தன. அச் சமயம் சில மலர்களும் இருந்தன. இந்த அல்லிக் குளத்தை முன்னமே வந்தியத்தேவன் பார்த்திருந்தான். அதன் அருகிலே தான் அவனும் விழுந்திருக்க வேண்டும்! நல்லவேளையாக, அப் பெண்கள் இருவரும் அவனைக் கவனிக்கவில்லை. பகல் வேளையாக இருந்து அவர்கள் அவன் விழுந்ததைப் பார்த்திருந்தால் கலகலவென்று சிரித்து அவனுடைய மானம் போகும்படி செய்திருப்பார்கள். இப்போது மணிமேகலையின் துணைக்குச் சந்திரமதி வந்து விட்டபடியால், அந்தப் பெண்களுக்குத் தெரியாமலேயே அவன் அங்கிருந்து நழுவிப் போய் விடலாம்.

இதற்கிடையில் அந்தப் பெண்களின் பேச்சு அவன் காதில் விழுந்தது.

"அம்மா! எதைக் கண்டு பயந்தீர்கள்? ஏன் அப்படிக் கூச்சலிட்டீர்கள்?" என்றாள் சந்திரமதி.

"அடியே! அந்த மதிள் சுவரைப் பாரடி! அதன் மேலே ஏதோ தெரிந்தது. தலையில் சடையும் முகத்தில் தாடியும் மீசையுமாக ஓர் உருவம் தெரிந்தது. அதன் கழுத்தில் — சொல்லப் பயமாயிருக்கிறதடி! — மண்டை ஓட்டு மாலை ஒன்று அணிந்திருந்தது! நான் கூச்சலிட்டதும் அது மறைந்து விட்டது!" என்றாள் மணிமேகலை.

"நன்றாயிருக்கிறது, இளவரசி! தங்களுடைய மனப் பிராந்திதான் அது! பேயும் இல்லை, பிசாசும் இல்லை! உயரமான மதிள் சுவரின் மேல் யாரும் வந்து உட்கார்ந்திருக்கவும் முடியாது" என்றாள் சந்திரமதி.

"இல்லையடி! என் மனப்பிராந்தியில் அப்படிப் பேய் பிசாசு ஒன்றும் தோன்றுவது வழக்கமில்லை..."

"ஆமாம்! மன்மதனையொத்த வடிவழகரின் முகந்தான் உங்கள் கனவிலும் நனவிலும் தோன்றுவது வழக்கம்!"

"சீச்சீ! இப்போது கூட உனக்கு விளையாட்டா?"

"பின், எப்போது விளையாடுவது? முன் மாலை நேரத்தில் பூங்காவனத்தில் அல்லிக் குளத்தினருகே வந்து காத்திருக்கிறீர்கள். முல்லை மலர்களின் மணம் கம்மென்று வீசுகிறது... ஆனால், பாவம், என்ன செய்கிறது? தாங்கள் வல்லத்து இளவரசரை எதிர்பார்த்துக் கொண்டிருக்க, மீசையும் தாடியும் உள்ள பிசாசு வந்து சேருகிறது!"

"போதும் போதாததற்கு நீயும் வந்து சேருகிறாய்!"

"என்னைப் பார்த்து விட்டுத்தான் அந்தப் பிசாசு பயந்து ஓடி விட்டதோ, என்னமோ? கடம்பூர் அரண்மனைப் பணிப்பெண் சந்திரமதியைக் கண்டால் பேய் பிசாசுகள், பூதங்கள், வேதாளங்கள் எல்லாம் பயந்து ஓடும் என்பது உலகப் பிரசித்தியாயிற்றே!"

"சந்திரமதி! உன் வேடிக்கைப் பேச்செல்லாம் இப்போது வேண்டாம். உண்மையாகவே நான் அந்த மதிள் சுவரின் மேல் கோரமான ஓர் உருவத்தைப் பார்த்தேன். நீ நம்பாவிட்டால், வேண்டாம்! நீ போன காரியம் என்ன ஆயிற்று என்று சொல்லு!"

"போன காரியம் பலிக்கவில்லை, இளவரசி!"

"ஏன்? ஏன்?"

"காஞ்சி இளவரசரும் கடம்பூர் இளவரசருந்தான் அங்கே கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். வல்லத்து இளவரசரைக் காணவே காணோம்..."

"ஒருவேளை அவரையும் எங்கேயாவது அனுப்பி வைத்து விட்டார்களா, என்ன?"

"அப்படியும் தெரியவில்லை. தங்கள் தந்தையும் பல்லவருந்தான் மலையமான் அரசரை எதிர்கொள்ளப் போயிருக்கிறார்கள். இடும்பன்காரியைக் கேட்டேன். இன்று சாயங்காலம் கரிகாலர் வல்லத்தரசர் மீது ஏதோ எரிந்து விழுந்தாராம்!....."

"அவருக்குப் பைத்தியந்தான் பிடித்திருக்கிறது. எல்லார் பேரிலும் எரிந்து விழுகிறார். பிறகு?...."

"'இன்றைக்கு இனிமேல் என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்த பிறகு வா!' என்று சொல்லி அனுப்பி விட்டாராம்!"

"பின்னர் அவர் எங்கே போயிருப்பார்?" என்றாள் மணிமேகலை.

"இந்த மாளிகை மதிள்சுவருக்குள்ளே தான் எங்கேயாவது அலைந்து கொண்டிருக்க வேண்டும். அதனால்தான் சொன்னேன்; ஒருவேளை அவரே பிசாசு போல் வேஷம் போட்டுக் கொண்டு தங்களைப் பயமுறுத்தினாரோ என்று."

"இல்லை; இந்த அரண்மனையில் வேஷக்காரர்கள் பலர் இருப்பது எனக்குத் தெரியும். ஆனால் அவர் வேஷம் போட்டு ஏமாற்றுகிறவர் அல்ல...."

"இப்படித்தான் நம்மைப் போன்ற அபலைப் பெண்கள் புருஷர்களை நம்பி ஏமாந்து போவது வழக்கம்."

"அப்படியேயிருக்கட்டும். நீ மறுபடியும் போய்த் தேடிப் பார்! அரண்மனை மதிளுக்குள்ளேதானே எங்கேயாவது இருக்க வேண்டும்? இடும்பன் காரியையும் தேடிப் பார்க்கச் சொல்லு!"

"இளவரசி! அந்த இடும்பன் காரியைக் கண்டால் எனக்குப் பிடிக்கவேயில்லை. விழித்து விழித்துப் பார்க்கிறான். அவனிடம் எனக்குப் பயமாகக் கூட இருக்கிறது....."

"பேய் பிசாசுக்குப் பயப்படாதவள் இடும்பன் காரிக்குப் பயப்படுகிறாயே? போனால் போகட்டும். அவனிடம் ஒன்றும் சொல்லாமலிருப்பதே நல்லது. நீயே இன்னொரு தடவை போய்த் தேடிப் பார்த்து விட்டு வா!"

"அதுவரையில்....."

"நான் இங்கேயே இருக்கிறேன்..."

"மறுபடியும் அந்தப் பிசாசு இங்கு வந்தால்?......"

"உன் பெயரைச் சொல்லி விரட்டியடித்து விடுகிறேன்!"

சந்திரமதி அங்கிருந்து போவதற்கு அறிகுறியான நூபுரத்தின் மெல்லிய ஒலி கேட்டது.

மேற்கூறிய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத் தேவனுடைய மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றின. சுவரின் மேலிருந்து எட்டிப் பார்த்த 'பிசாசு' யார்?



யிருக்கும் என்று யோசித்தான். ஆழ்வார்க்கடியான் காளாமுகனுடைய வேடம் தரித்து வந்து தன்னைக் காப்பாற்றியது அவன் நினைவுக்கு வந்தது. ஒருவேளை அந்த வீர வைஷ்ணவனாகவே இருக்குமோ? தஞ்சாவூரிலிருந்து தனக்கு ஏதேனும் முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறானோ? இங்குள்ளவர்களுக்கு அடையாளம் தெரியாமலிருக்க அப்படி வேஷம் தரித்து வந்திருக்கிறானோ?

மணிமேகலை தன்னைப் பார்க்க இவ்வளவு ஆவல் கொண்டிருப்பதின் காரணம் என்ன? எதற்காகத் தோழியை அனுப்பித் தேடி அழைத்துக் கொண்டு வரச் சொல்கிறாள்? அவள் விஷயத்தில் மணிமேகலையின் மனோநிலை அவனுக்கு ஒருவாறு தெரிந்திருந்தது. அதனாலேயே அவன் அருகில் அதிகமாக நெருங்காமலிருந்து வந்தான். கந்தமாறனுடைய பகைமையை இன்னும் தூண்டி விடாமலிருக்கவும் விரும்பினான். ஆயினும், இப்போது நந்தவனத்தில் வந்து தனிமையாக உட்கார்ந்து கொண்டு அவனை அழைத்து வரச் சொல்லியிருக்கிறாள். ஏதோ முக்கியமான காரியம் இல்லா விட்டால் இவ்வளவு துணிச்சலான காரியத்தில் இறங்கியிருக்க மாட்டாள். பாவம்! அவளுக்கும் ஏதாவது சங்கடம் நேர்ந்திருக்கிறதோ, என்னமோ? அல்லது நந்தினி அவளிடம் ஏதாவது செய்தி சொல்லி அனுப்பியிருக்கலாம். கடவுளே! இங்கே, இந்தக் கடம்பூர் அரண்மனையில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் மனத்தில் ஏதோ ஒன்றை மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சற்று முன்னால் மணிமேகலை கூறியது ரொம்ப உண்மை. எல்லாருமே வஞ்சக வேஷதாரிகள். இவர்களுக்கு மத்தியில் இந்தப் பேதைப் பெண் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுகிறாள். பழுவூர் ராணி இந்தப் பெண்ணை எந்தத் தீய காரியத்துக்குப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறாளோ, தெரியவில்லை. ஆம்; மணிமேகலையின் மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றியிருக்க வேண்டும். ஏதோ ஓர் அபாயத்தை அவள் எதிர்பார்த்திருக்க வேண்டும். ஆகையினாலேயே அவள் தன்னுடைய உதவியை நாடுகிறாள்.

அந்தக் கள்ளங் கபடமற்ற பேதைப் பெண் முன்னொரு சமயம் தனக்குச் செய்த உதவியை வந்தியத்தேவன் நினைத்துப் பார்த்துக் கொண்டான். அவளுக்கு உண்மையாகவே ஏதேனும் துன்பம் நேர்ந்திருந்து தன்னுடைய உதவியைக் கோருவதாயிருந்தால், அதை மறுப்பது நன்றி கொன்ற பாதகம். எப்படியிருந்தாலும் உண்மையைத் தெரிந்து கொள்ளுவதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம். சந்திரமதி போய் விட்டாள்; மணிமேகலை தனியாக இருக்கிறாள். யார் கண்டது? அவளுடைய உதவி அவனுக்கு மறுபடியும் தேவையாயிருக்கக் கூடும். அவளுடைய சகாயத்தினால் இந்தச் சூழ்ச்சி குடிகொண்ட அரண்மனையை விட்டுப் போக முடிந்தால் கூட நல்லதுதான். எதற்கும் அவளிடம் இச்சமயம் போய்க் கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ளலாம்...



ல்லிக் குளத்தின் கரையிலிருந்த பளிங்குக்கல் மேடையில் மணிமேகலை உட்கார்ந்திருந்தாள். மேகங்கள் சூழ்ந்திருந்த வானத்தில் ஆங்காங்கு சில நட்சத்திரங்கள் சுடர் விட்டு ஒளிர்ந்தது போல் அல்லிக் குளத்திலும் அடர்த்தியாகப் படர்ந்திருந்த இலைகளுக்கு மத்தியில் மலர்கள் தலை தூக்கி நின்றன. சுற்றிலும் சூழ்ந்திருந்த இருளில், இரவில் பூக்கும் அம்மலர்களின் வெண்மை நிறம் நன்கு எடுத்துக் காட்டப் பட்டது. அல்லிக்குளத்துக்கு அப்பால் முல்லைப் புதர்களில் பாதி மலர்ந்த பூக்களும் மொட்டுக்களும் நீலநிற விதானத்தில் முத்துக்களைப் பதித்தது போல் காட்சி தந்தன.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த மணிமேகலை தனக்குப் பின்னால் காலடிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். மிகச் சமீபத்தில் வந்திருந்த உருவத்தைக் கண்டு அவசரமாக எழுந்த போது கால் தடுமாறிப் பின்னாலிருந்த குளத்தில் விழப் போனாள்.

"ராஜகுமாரி! நான்தான்!" என்று கூறிக் கொண்டே வந்தியத்தேவன் மணிமேகலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

மணிமேகலையின் உடல் சிலிர்த்தது. இயற்கையாக ஏற்பட்ட கூச்சத்தினால் அவனுடைய கரங்களைப் பற்றி அப்பால் தள்ளி விட்டுத் தன்னை விடுவித்துக் கொள்ளப் பார்த்தாள். ஆனால் அதற்கு வேண்டிய பலம் அப்போது அவளுடைய கரங்களில் இல்லை!

அந்த முயற்சியில் மறுபடியும் பின்னாலே தான் சாயும்படி நேர்ந்தது.



ந்தியத்தேவன் இன்னும் கெட்டியாக அவளைப் பிடித்துத் தாங்கி முன்பக்கமாகக் கொண்டு வந்தான்.

மணிமேகலை ஒரு பெரு முயற்சி செய்து தன்னைச் சுதாகரித்துக் கொண்டு, "விடுங்கள்! என்னைத் தொடாதீர்கள்!" என்று கோபக் குரலில் கூறினாள்.

வந்தியத்தேவன் அவளை விட்டு விட்டு "ராஜகுமாரி! மன்னிக்க வேண்டும்!" என்றான்.

மணிமேகலை இன்னமும் படபடப்பு நீங்காத தழதழத்த குரலில், "தங்களை நான்

எதற்காக மன்னிக்க வேண்டும்?'' என்று கேட்டாள்.

''திடீரென்று வந்து தங்களைத் திடுக்கிடச் செய்ததற்காகத்தான்!''

''வந்ததுதான் வந்தீர்கள்! எதற்காக என்னைத் தொட்டுப் பிடித்துக் கொள்ள வேண்டும்?'' என்று மணிமேகலை கேட்ட குரலில், அவள் தன்னை நன்றாகச் சுதாகரித்துக் கொண்டு விட்டாள் என்பது வெளியாயிற்று.

''தாங்கள் குளத்தில் விழாமல் பிடித்துக் கொண்டேன்!''

''அழகாயிருக்கிறது! அன்று ஏரியில் விழுந்து நான் முழுகித் தத்தளித்த போது இவ்வளவு பரிவு காட்டவில்லையே? இந்த முழங்கால் அளவு தண்ணீர் உள்ள குளத்தில் நான் விழாமல் காப்பாற்றுவதற்கு வந்து விட்டீர்களே?''

''அது என் குற்றந்தான்!''

''நீங்கள் ஒரு குற்றமும் செய்யவில்லை; குற்றமெல்லாம் என்னுடையது.''

''அது எப்படி? தாங்கள் குற்றம் எதுவும் செய்யவில்லை. என் பேரில் ஏதோ கோபத்தினால் இவ்விதமாகச் சொல்லுகிறீர்கள்!''

''முன்னொரு நாள் தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள்ளிருந்து திடீரென்று நான் இருந்த அறையில் புகுந்தீர்கள். அன்றைக்கும் என்னைத் திடுக்கிட வைத்தீர்கள். அப்போதே நான் கூக்குரலிட்டுத் தங்களை என் தந்தையிடம் பிடித்துக் கொடுத்திருக்க வேண்டும்!''

''அன்றைக்கு என்னைப் பெரும் அபாயத்திலிருந்து காப்பாற்றினீர்கள். அதை என்றைக்கும் நான் மறக்க மாட்டேன்...''

''அதற்குப் பதில் தாங்கள் நன்றி செலுத்திய விதத்தை நானும் மறக்க மாட்டேன். நன்றி கெட்டவர்களிலே தங்களைப் போல் நான் பார்த்ததே இல்லை...''

''இளவரசி! இது பெரிய அபாண்டம்! எந்த விதத்தில் நான் நன்றி கெட்டவன்? சொல்லுங்கள்!''

''தங்களை யாரோ கொலைகாரர்கள் துரத்தி வருவதாகப் பொய் சொன்னீர்கள். நான் வேட்டை மண்டபத்துக்குப் போய்ப் பார்த்து விட்டு வருவதற்குள் என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே திருடனைப் போல் ஓடி விட்டீர்கள்!''

''திருடனைப் போல் ஓடி விட்டேன் என்றா சொன்னீர்கள்?''

''திருடனைப் போல் என்று கூறியது தவறு; திருடனேதான்!''

''இளவரசி! அன்று நான் எவ்வளவு இக்கட்டான நிலைமையிலிருந்தேன் என்பது தங்களுக்குத் தெரியாது....''

''தெரியாதவளுக்குத் தாங்கள் தெரியப் படுத்தியிருக்கலாமே? யார் வேண்டாம் என்று தடுத்தார்கள்?''

''தங்கள் தோழி சந்திரமதிதான். தாங்கள் வேட்டை மண்டபத்துக்குள் சென்றதும் சந்திரமதி இன்னொரு வாசல் வழியாக வந்து விட்டாள். அவள் கண்களில் படாமல் இருப்பதற்காக யாழ்க் களஞ்சியத்தில் மறைந்து கொண்டேன்.''

''பிறகு அங்கிருந்து மாயமாய் மறைந்து போய் விட்டீர்கள்.''

''இல்லை; மச்சுப்படி ஏறி மாடங்களையெல்லாம் தாண்டி மதில் சுவர் மேலும் ஏறிக் குதித்துத்தான் போனேன். இளவரசி! அன்று என்னை யாராவது கண்டுபிடித்திருந்தால், நான் ஏற்றுக் கொண்டிருந்த காரியமும் கெட்டிருக்கும்; தங்களுக்கும் வசைச் சொல் ஏற்பட்டிருக்கும்....''

''இந்தப் பேதைப் பெண்ணைப் பற்றித் தங்களுக்கு எவ்வளவு கவலை?....''

''உண்மையாகவே கவலைதான்!''

''அப்படியானால், இங்கே தாங்கள் திரும்பி வந்து இத்தனை நாள் ஆயிற்றே? சொல்லாமல் ஓடிப் போன காரணத்தைச் சொல்லியிருக்கலாமே?.....''

''அதற்கு சந்தர்ப்பத்தைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்....''

''ஏன், ஐயா, வெறும் வார்த்தை? நான் இருக்கும் திக்கையே தாங்கள் திரும்பிப் பார்ப்பது கிடையாதே?''

''சகோதரி!.....''

''நான் தங்கள் சகோதரி அல்ல!''

''தாங்கள் என் சிநேகிதன் கந்தமாறனுடைய சகோதரி; ஆகையால் எனக்கும் சகோதரி.''

''கந்தமாறன் என்னுடைய சகோதரன் அல்ல; தங்களுக்கு அவன் சிநேகிதனும் அல்ல. நம் இருவருக்கும் அவன் கொடிய பகைவன்....''

''இளவரசி! அதுதான் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே! சில நாள் முன் வரையில் கந்தமாறன் என் உயிர்க்குயிரான நண்பனாக இருந்தான். இப்போது அடியோடு மாறிப் போயிருக்கிறான். பார்த்திபேந்திரன் எப்போது என் தலைக்கு உலை வைக்கலாம் என்று பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆதித்த கரிகாலரோ நிமிஷத்துக்கு நிமிஷம் மாறுகிறார். இந்த நிமிஷம் அன்பாகப் பேசுகிறார்; அடுத்த நிமிஷம் எரிந்து விழுகிறார். எப்போது என்ன ஆபத்து வருமோ என்று எதிர்பார்த்துக் காலங் கழிக்கிறேன். இந்த நிலைமையில் என்னுடைய நன்றியைச் செலுத்துவதற்காகத் தங்களை நான் தேடி வந்தால்....''

''ஐயா! தங்களைக் காப்பாற்றிக் கொள்வதில் தாங்கள் இவ்வளவு ஊக்கமாயிருப்பது பற்றி நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்....!''

''இளவரசி! என்னைப் பற்றி நான் கவலைப்படவில்லை. என் உயிரைப் பற்றியும் கவலைப்படவில்லை. தங்களுக்கு என்னால் தீங்கு எதுவும் நேராமலிருக்க வேண்

புதிய

# கோத்ரெஜ் லிக்விட்

## "பிசுபிசுப்பு ஓடுது-படக்குனு,



அப்பிடின்னு என்னோட வேலைக்காரி சொல்றாள் எத்தனை மாற்றம். இன்னும் இதை நான் நம்ப முடியலை. கொஞ்ச நாளைக்கு முன்னாலதான் அவள் புகார் பண்ணினாள்: "பாத்திரமெல்லாம் ஒரே பிசுபிசுப்பு. போட்டு தேயு தேயுனு தேய்க்க வேண்டியிருக்கு." மிகச் சிறந்த துலக்கும் பவுடரைக் கொடுத்தாலும்கூட அவள் முணு முணுத்தாள். அவ முணு முணுக்கிற வேகத்தைவிட அதிக வேகமா பவுடரை உபயோகிச்சாள். அதோட, அவள் துலக்கின பாத்திரங்களை மறுபடியும் நான் துலக்க வேண்டியிருந்தது. அவள் செய்த வேலையை நான் திருப்பி செய்யுறதுக்கு அவளுக்கு சம்பளம் கொடுக்க வேண்டியிருந்தது. பணம் என்ன மரத்திலேயா காய்க்குது.

அப்புறம்தான் புதிய கோத்ரெஜ் லிக்விட் கிளீனர் வாங்கியாந்தேன். எப்பிடி மூடியின் பாதியளவு பவுடரை தண்ணீரிலே கலக்கிறதுன்னு அவளுக்கு சொல்லிக் கொடுத்தேன். தட்டுகளை தண்ணீரிலே அமிழ்த்தி கழுவுறதையும் சொல்லிக் கொடுத்தேன். அவள் எப்போதும்போல், 'அதெல்லாம் ஒண்ணும் சரிவராதுன்னு' முணங்கினாள் முதல்நாள் ராத்திரி சமைச்ச வாணலியிலிருந்த கனமான பிசுக்கை நான் அகற்றியதை பார்த்தபோதுதான், அவள் உணர ஆரம்பித்தாள். அதிலிருந்து ஒத்துழைக்க ஆரம்பிச்சா. நீங்க வீணாக்கிற பவுடர்களைப்போல் கோத்ரெஜ் பவுடரை வீணாக்கத் தேவையில்லை. அவள் அதை உபயோகிப்பதற்கான குறிப்புகளை பின்பற்றினாள். அதாவது மூடியில் பாதியளவு பவுடரை மட்டுமே உபயோகித்தாள்.

பாத்திரங்களை துலக்கி மகிழ்ந்தாள். இனி அவளைத் திட்டவேண்டிய அவசியமே

# கிளீனர்

## நீண்டநாள் வருது-பளிச்சினு”



இல்லை. இதற்கு முன்னாலே உபயோகிச்ச பவுடரைவிட அதிக நாளைக்கு வருவது கோத்ரெஜ் லிக்விட் கிளீனர். பாத்திரங்களை பளிச்சினு சுத்தமாக்குறதுக்காக அவள் செய்த வேலையை நான் திருப்பிச் செய்ய வேண்டியதில்லை. புதிய கோத்ரெஜ் லிக்விட் கிளீனர். இதைப்போல் இதற்கு முன் அவள் பார்த்ததே இல்லை; சொல்லப்போனால் நான் கூடத்தான்.




**இலவசம்**

ஒரு ஒப்பற்ற பாத்திரம் துலக்கி - இவ்வித பேக் வாங்கும்போது.

டுமே என்றுதான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.''

''கவலைப்பட்டு உருகிக் கொண்டே இருக்கிறீர்கள். ஆண் மக்கள் எல்லாருமே வஞ்சகர்கள் என்று சந்திரமதி சொல்லுவாள். அது உண்மை என்று இப்போது தான் நிச்சயமாகிறது.''

"யார் என்ன சொன்னாலும் சரிதான்; என் உயிர் உள்ளவரையில் தங்களை நான் மறக்க மாட்டேன்! தாங்கள் எனக்குச் செய்த உதவியையும் மறக்க மாட்டேன்!''


ணிமேகலை சிறிது சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, ''ஐயா! இப்போது தாங்கள் சொன்னதை இன்னொரு தடவை சொல்லுங்கள்!'' என்றாள்.

''ஆயிரம் தடவை வேணுமானாலும் சொல்கிறேன். என் உயிர் உள்ளவரையில் தாங்கள் செய்த உதவியை மறக்க மாட்டேன்!'' என்று வந்தியத்தேவன் உறுதியுடன் கூறினான்.

''ஆயிரம் தடவை சொன்னால் மட்டும் என்ன பயன்? அதை நிறைவேற்ற முயற்சி எடுக்க வேண்டும் அல்லவா?''

''எந்த விதத்தில் முயற்சி எடுப்பது? சொல்லுங்கள், இளவரசி!''

''தங்கள் உயிர் உள்ள வரையிலேதானே எனக்கு நன்றி செலுத்துவீர்கள்? ஆகையால், தங்கள் உயிரை முதலில் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். தங்களுக்காக இல்லாவிட்டாலும், எனக்காகக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்!''

''இளவரசி! இது என்ன?....''

''ஐயா! உண்மையைச் சொல்லுங்கள்! சற்று முன்னால் நானும் என் தோழியும் பேசிக் கொண்டிருந்ததைத் தாங்கள் கேட்டுக் கொண்டிருந்தீர்களா?''

''மன்னிக்க வேண்டும், இளவரசி! 'ஐயோ! பிசாசு!' என்று தாங்கள் கூவியதைக் கேட்டு ஓடி வந்தேன். அதற்குள் தங்கள் தோழி சந்திரமதி வந்து விட்டாள். உங்களுடைய பேச்சைக் கேட்கும்படி நேர்ந்து விட்டது.....''

''தங்களை எப்படியாவது தேடிப் பிடித்து அழைத்து வரும்படி அவளை நான் அனுப்பியது தெரியும் அல்லவா?''

''காதில் விழுந்தது; அதனாலேதான் தங்களை அணுகி வந்தேன்....''

''இல்லாவிடில் என் அருகிலும் வந்திருக்க மாட்டீர்கள். அடடா! என்ன கரிசனம்? போனால் போகட்டும். தாங்கள் எவ்வளவு கல்நெஞ்சராயிருந்தாலும், என் மனம் கேட்கவில்லை. தங்களுக்கு ஆபத்து என்றால், நான் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.''

''இளவரசி! என்னுடைய ஆபத்தான நிலைமை எனக்குத் தெரிந்தேயிருக்கிறது. எனக்குத் தெரியாத புதிய ஆபத்து ஏதேனும் வரப் போகிறதா?''

''ஐயா! இந்த அரண்மனையை விட்டுத் தாங்கள் உடனே போய் விடுங்கள்!''

''என்னைப் புறங்காட்டி ஓடச் சொல்கிறீர்களா?''

''போர்க்களத்தில் புறங்காட்டி ஓடக் கூடாது. சதிகாரர்களிடமிருந்து தப்பிச் செல்வதில் குற்றம் என்ன?''

''யார் சதிகாரர்கள்?''

''வேறு யார்? கந்தமாறனும் பார்த்திபேந்திரனுந்தான்.''

''அவர்களுக்குப் பயந்து நான் இந்த அரண்மனையை விட்டு ஓட முடியாது.''

''என் தமையனால் தங்களுக்குத் தீங்கு நேர்வதை அறிந்து, நான் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியாது.''

''இளவரசி! கந்தமாறனுடைய காரியங்களுக்குத் தாங்கள் எப்படிப் பொறுப்பு ஆவீர்கள்?''

''என் காரணமாகவே அவனும் பார்த்திபேந்திரனும் தங்களுக்குத் தீங்கு இழைக்கப் பார்க்கிறார்கள்....''

''தங்களுக்காக நான் துன்பம் அடைந்தால் அது என் பாக்கியம். தாங்கள் செய்த உதவிக்குப் பிரதி செய்ததாக எண்ணிக் கொள்வேன்....''

''நந்தினிதேவி கூறியது சரிதான்!''

''ஆகா! பழுவூர் ராணி தங்களிடம் என்ன சொன்னாள்!''

''உங்களிடம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி சொன்னால், கேட்க மாட்டீர்கள்; — வேறு யுக்தி செய்ய வேண்டும் என்றார். ஐயா! தயவு செய்து தாங்கள் என்னுடன் வாருங்கள். பழுவூர் ராணி தங்களை ஏதோ ஒரு அவசர காரியமாகப் பார்க்க வேண்டுமாம்.''

''அந்த அவசரமான காரியம் என்னவென்பது தங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''தெரியும்; பழுவேட்டரையர் கொள்ளிடத்தைத் தாண்டும் போது படகு கவிழ்ந்து போய் விட்டதாக ஒரு செய்தி வந்திருக்கிறது.....''

''நானும் கேள்விப்பட்டேன்.''

''தாங்கள் உடனே போய் அதைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொண்டு வரவேண்டுமாம். அவ்விதம் தங்களிடம் பழுவூர் ராணி நேரில் கேட்டுக் கொள்ளப் போகிறார்.''


ந்தியத்தேவன் சிறிது யோசித்து விட்டு, ''இதையெல்லாம் என்னிடம் முன்னால் கூற வேண்டாம் என்று பழுவூர் ராணி எச்சரிக்கவில்லையா?'' என்றான்.

''ஆமாம்!''




"பின், ஏன் இதைப் பற்றி என்னிடம் சொன்னீர்கள்?"

"என் மனம் குழம்பியிருக்கிறதுதான் காரணம். ஐயா! சில நாளைக்கு முன்னால் வரையில் நான் கள்ளங் கபடறியாத பெண்ணாயிருந்தேன். யாரைப் பற்றியும் எந்தவிதமான சந்தேகமும் கொண்டதில்லை. யாரைப் பற்றியேனும் என் தோழிகள் குறை சொன்னாலும் நம்புவதில்லை. இப்போது எல்லாரையும் சந்தேகிக்கிறேன்; எல்லா வற்றையும் சந்தேகிக்கிறேன்."

"என் முகத்தில் விழித்த நேரத்தினால் ஏற்பட்ட விபரீதம் போலிருக்கிறது."

"ஒரு விதத்தில் அது உண்மைதான்! பழுவூர் இளையராணி தங்களை அழைத்து வரும்படி எனக்குச் சொல்லி அனுப்பினார். அவருடன் பேசும் போது ஒரு சந்தேகமும் தோன்றவில்லை. எல்லாம் சரியென்று தோன்றியது... இப்பால் வந்ததும் அவர் பேரிலேயே சந்தேகம் ஏற்படுகிறது."

"என்ன சந்தேகம், இளவரசி? நந்தினி தேவியின் பேரில் தங்களுக்கு என்ன சந்தேகம்?"

"அவரும் சேர்ந்து தங்களுக்குத் தீங்கு செய்ய எண்ணுகிறாரோ என்றுதான்."

"இந்தச் சந்தேகம் ஏன் வந்தது? அவர் எனக்கு என்ன தீங்கு செய்ய முடியும்?"

"அதுவும் என்னால் சொல்ல முடியாது. ஆனால் அவருடைய பேச்சும் நடவடிக்கை களும் யோசித்துப் பார்த்தால் சந்தேகம் உண்டாக்குகின்றன. அடிக்கடி ஒரு நீண்ட வாளைக் கையில் வைத்துக் கொண்டு ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிறார்...."

"ஒரு பெண்ணின் கையில் உள்ள வாளைக் கண்டு நான் அஞ்சுவதில்லை. அதைக் காட்டிலும்....."

"முகத்திலுள்ள கண்களாகிற வாள் களுக்கு அஞ்சுவீர்கள். எல்லாரும் சொல் லும் கதைதான் இது. ஐயா! நந்தினி தேவி யின் வாளுக்கு மட்டும் தங்களை நான் பயப்படச் சொல்லவில்லை. முதன் முதலில் தாங்கள் வேட்டை மண்டபத்திலிருந்து நான் இருந்த அறைக்குள் வந்ததை ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்...."

"நன்றாக ஞாபகம் இருக்கிறது."

''கொலைகாரர்கள் சிலர் தங்களைத் தொடர்ந்து வந்ததாகச் சொன்னீர்கள். முதலில் அதை நான் நம்பவில்லை. பிறகு வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்த்தேன். அங்குள்ள மிருகங்களுக்குப் பின்னால் சிலர் மறைந்திருப்பதாகத் தோன்றியது. அவர்கள் தங்களைக் கொல்ல வந்தவர்களா, அல்லது தங்களுடனேயே வந்தவர்களா என்று அப்போது என்னால் நிச்சயிக்க முடியவில்லை. அதனாலேயே அதைப் பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. அவர்களைப் பற்றிச் சொன்னால், தங்களைப் பற்றியும் சொல்ல வேண்டியதாகும் அல்லவா?''

''எனக்குத் தாங்கள் செய்த பேருதவி எவ்வளவு என்பதை இப்போதுதான் நன்கு உணர்ந்து கொள்கிறேன்.''

''அதற்காக நான் அந்த விஷயத்தை இப்போது சொல்லவில்லை. சற்று முன்னால் நந்தினி தேவி தங்களை அழைத்து வரும்படி என்னை அனுப்பினார். உடனே, ஏதோ அவரிடம் கேட்பதற்காகத் திரும்பிப் போனேன். கதவைத் தாளிட்டுக் கொண்டிருந்தார். உள்ளே, வேட்டை மண்டபத்திலிருந்து பேச்சுக் குரல்கள் இலேசாகக் கேட்டன. ஐயா! என் சந்தேகத்தைத் தங்களுக்கு இப்போது சொல்லி விடுகிறேன். வேட்டை மண்டபத்தில் யாரோ ஆள்கள் வந்து ஒளிந்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. அவர்களுக்கும் பழுவூர் ராணிக்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும் என்றும் சந்தேகிக்கிறேன்.''

வந்தியத்தேவன் இப்போதுதான் நிலைமையின் முக்கியத்தை நன்கு உணர்ந்தான். இன்று ஏதோ விபரீத சம்பவம் நிகழப் போகிறது என்பதாக அவன் உள்ளுணர்ச்சி அவனுக்குச் சொல்லிக் கொண்டேயிருந்தது. மணிமேகலை கூறிய செய்திகள் அவன் உள்ளுணர்ச்சியை உறுதிப்படுத்தின.

''இளவரசி! எனக்குத் தாங்கள் ஓர் உதவி அவசியம் செய்ய வேண்டும்!''

''என்னவென்று சொல்லுங்கள்!''

''வேட்டை மண்டபத்துக்கு, வெளியிலிருந்து சுரங்கப் பாதை மூலமாக வரும் வழி ஒன்றிருக்கிறது. இப்போது நந்தினி தேவி இருக்கும் அறை வழியாகப் போவதற்கும் ஒரு வாசல் இருக்கிறது. இவற்றைத் தவிர மூன்றாவது வழி ஒன்றும் இருக்கிறதல்லவா?''

''ஆமாம்; வேலைக்காரர்கள் போவதற்கென்று ஒரு வழி இருக்கிறது. அரண்மனைக்குப் புதிதாக வரும் விருந்தாளிகளை அந்த வழியாகத்தான் என் தந்தை அழைத்துப் போவது வழக்கம்...''

''இளவரசி! அந்த வழியாக என்னை இப்போதே வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போங்கள்!''

''எதற்காக?''

''அங்கே வந்து ஒளிந்திருப்பவர்கள் யார், அவர்கள் என்ன நோக்கத்துடனே வந்திருக்கிறார்கள் என்று கண்டுபிடிப்பதற்குத்தான்.....''

''தங்களை அபாயத்திலிருந்து தப்புவிக்க வந்தேன். அபாயத்துக்கே இட்டுச் செல்லும்படி கேட்கிறீர்கள்....''

''என் இடையில் எப்போதும் கத்தி இருக்கிறது. இளவரசி! தெரியாமல் வரும் அபாயத்தைக் காட்டிலும் தெரிந்த அபாயத்தை எதிர்ப்பது எளிது. அபாயத்தை நாமே எதிர்கொண்டு போவது இன்னும் மேலானது.''

''ஒரு நிபந்தனைக்குச் சம்மதித்தால் தங்களை வேட்டை மண்டபத்துக்கு அழைத்துப் போவேன்.''

''அது என்ன?''

''நானும் தங்களுடன் வருவேன்; என் இடையிலும் ஒரு சிறிய கத்தி வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று மணிமேகலை தன்னுடைய கத்தியை எடுத்துக் காட்டினாள்.

வந்தியத்தேவன் அதற்குச் சம்மதம் கொடுத்தான்.

''அப்படியானால் சீக்கிரம் என்னைப் பின்தொடர்ந்து வாருங்கள். சந்திரமதி இங்கே என்னைத் தேடி வருவதற்குள் போய் விட வேண்டும்'' என்றாள்.

நந்தவனத்தைக் கடந்து வந்தியத்தேவனை மணிமேகலை அழைத்துச் சென்றாள். பிறகு, மாளிகையின் ஓரமாகச் சுவர்களின் கரிய நிழல் அடர்ந்திருந்த இடங்களின் வழியாக அழைத்துச் சென்றாள். பிறகு மாளிகையில் புகுந்து ஜன சஞ்சாரம் இல்லாத தாழ்வாரங்கள், நடைபாதைகள் வழியாக அழைத்துச் சென்றாள். பின்னர், கதவு சாத்தப்பட்டிருந்த ஒரு வாசற்படியின் அருகில் வந்தாள். அங்கேயே வந்தியத்தேவனை நிற்கச் செய்து விட்டு விரைந்து சென்று ஒரு கை விளக்கை எடுத்து வந்தாள். கதவைத் திறந்து உள்ளே விளக்கைத் தூக்கிக் காட்டிய போது வரிசையாகப் படிக்கட்டுக்கள் அமைந்த குறுகிய நடைபாதை காணப்பட்டது. இருவரும் அப் படிகளில் இறங்கிச் சென்றார்கள். சிறிது நேரம் சென்ற பிறகு, முன்னால் சென்ற மணிமேகலை சட்டென்று நின்று, மெல்லிய குரலில், ''நில்லுங்கள்! ஏதோ காலடிச் சத்தம் போலிருக்கிறது. தங்களுக்குக் கேட்கிறதா?'' என்றாள்.

(தொடரும்)

# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம். சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

## ஹமாம்

குடும்ப சோப்




டாட்டா தயாரிப்பு

# நாற்பது வயதில்...

இன்று எனக்கு முதல் இரவு.

எல்லாப் பெண்களுக்கும் வருமே வெட்கம், மனக்கிளர்ச்சி, எதிர்பார்ப்பு, தயக்கம் இவற்றில் தயக்கம் மட்டுமே என்னுள் இருந்தது.

ஒருவேளை, காலாகாலத்தில் திருமணம் நடந்திருந்தால் இந்த உணர்ச்சிகள் என்னையும் ஆட்டிப் படைத்திருக்குமோ என்னவோ....?

ஆனால் இந்த முப்பத்தேழு வயதில், சத்தியமாய் எனக்கு வெட்கப்படவோ, கண்ணை மேலே செருகியபடி கனவு காணவோ தெரியவில்லை.

''பார்த்து நடந்துக்கோடி. எங்களிடம் பேசற மாதிரியே வெடுக், வெடுக்குனு பேசாதே. அறைக்குள்ளே போகும்போது தலையைக் குனிஞ்சுண்டு போ, என்ன?'' என்று அம்மா ஒரே படபடப்பிலிருந்தாள்.

''ஏதோ பகவான், இப்பவாவது கண்ணைத் தொறந்தானே'' என்று பதினைந்து வருடங்களுக்கு முன்பு எங்களை விட்டுப் போன அப்பாவை நினைத்துக் கண்கலங்கினாள்.

அப்பா இறந்த போது எனக்கு வயது இருபதுதான். பி. காம் முடித்துவிட்டு ரிசல்டை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்பாவின் கம்பெனியிலேயே எனக்கு வேலை கிடைக்க, இரண்டு தங்கைகளையும், கடைக்குட்டி தம்பியையும் ஓரளவு படிப்பு, வேலை என்று உருவாக்குவதற்கு வசதியாயிருந்தது.

அந்த வயதில் மனத்தில் சலனப்படக் கூட குடும்பச் சூழ்நிலை என்னை அனுமதிக்கவில்லை.

மூச்சை முட்டும் கடமைகள் பாரமாக எப்போதும் நெஞ்சை அழுத்திக் கொண்டிருந்ததால், 'காலுக்குக்கீழே பஞ்சுப் பொதி பறப்பதும்,' ஒருக்களித்த கதவு பின்னால் நின்று, எதிர் வீட்டு இளைஞனை 'சைட்' அடிப்பதும் கதைகளில் மட்டுமே படித்து 'இப்படியும் கூட இருக்குமா?' என்று வியக்க மட்டுமே முடிந்தது.

அம்மாவுக்கு அதில் ஒரு பெருமை.

''என் மூத்த பொண்ணு கலா மட்டும் பொறுப்பா நடந்துக்கலேன்னா நான் தெரு



வுலதான் இந்தக் குழந்தைகளோட நின்னுருக்கணும். அவர் கண்ணை மூடவைச்ச பகவான் இவமூலமா கண்ணைத் தொறந்துட்டார்'' என்று போகிற வருகிறவர்களிடமெல்லாம் சொல்லுவாள்.

ஒரு வேளை என் கடமையை நான் மறந்து பாதை மாறிவிடக் கூடாது என்பதை ஞாபகப் படுத்தவே இப்படிச் சொல்லுகிறாளோ என்று எனக்குத் தோன்றும்.

"இந்தாடி பவுடரைலைட்டாப் போட்டுக்கோ'' என்று அம்மா பவுடர் டப்பாவை நீட்டினாள்.

காலையில் என் கையைப் படித்தவரின் உருவத்தை நினைத்துப் பார்த்தேன்.

'நாற்பது வயதில் கல்யாணம் என்பது முற்றின முருங்கைக்காயைச் சமைத்துச் சாப்பிடுவது போல' என்று எவரோ எழுதிய புதுக்கவிதை ஒன்றைப் பத்திரிகையில் படித்துக் கோபப்பட்டது ஞாபகம் வந்தது.

இப்போது என் கல்யாண அமர்க்களங்களைப் பார்த்தால் அந்தக் கவிதையை நினைத்துச் சிரிப்பு வந்தது.

கல்யாணக் கலாட்டாக்களில் அனைவரிடத்திலும் ஒரு மயக்கம் இருப்பது புரிந்தது.

இளஞ்ஜோடிகளைக் கிண்டலடிப்பது போல் எங்களை இயல்பாகக் கேலி செய்யவும் முடியாமல், செயற்கையாகக் கிண்டலடிப்பதாகப் பேர் பண்ணி பலர் அசடு வழிந்ததை நினைத்துப் பார்த்தேன், சிரிப்பு வந்தது!

''ச்சூ. இந்த மாதிரி திடீர், திடீர்னு சிரிக்காதடீ! கல்யாணப் பொண்ணா, லட்சணமா அடக்கமாயிரு'' என்று அம்மா அதட்டினாள்.

''இந்த வயசிலேயும் இது கட்டாயமா அம்மா?'' என்றதும் அம்மா முகம் சுண்டிப் போனாள்.

அம்மாவைப் பார்க்கப் பாவமாயிருந்தது!

அவள்தான் என்ன செய்வாள் பாவம்!

''சாரிம்மா! அது சரி, நீ சந்துரு மாமாவுக்குப் பட்சணம் கொடுக்கணும்னு சொல்லிண்டிருந்தியே, அவர் ஊருக்கு கிளம்பிடப் போறார். போய்ப் பாரு'' என்று அவள் மூடை மாற்ற முயன்றேன்.

''ஆமாண்டி, ராத்திரி பத்துமணி பஸ்ஸுக்குப் போறான் அவன்'' என்று பரபரத்தபடி அம்மா நகர்ந்தாள்.

அம்மா எப்போதும் இப்படித்தான். அந்தந்த நிமிட உணர்ச்சிகளை அவளிடத்தில் காணலாம்.

ஐந்து நிமிடம் முன்னால் சிரிப்பாள். சட்டென்று அழுவாள். உடனே கோபப்படுவாள். உணர்ச்சிகளின் சங்கமம் அவள்!

எல்லோரும் கதவு வரை என்னுடன் வர, கையில் பால் டம்ளருடன் அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனேன்.

தாழ்ப்பாள் போட்டுவிட்டு நிமிர்ந்து பார்த்தேன்.

கட்டிலில் அமர்ந்து ஏதோ புத்தகம் புரட்டிக் கொண்டிருந்தவர் நிமிர்ந்து என்னைப் பார்த்தார்.

பாலை அவரிடம் கொடுத்து வணங்கினேன்.

மௌனமாக இருவரும் ஒருவரையொருவர் பார்ப்பதும், சுவரையும், தரையையும் புதிதாகக் கவனிப்பதுமாய் இருந்தோம்.

''உட்கார்!'' என்றார்.

கட்டிலில் அமர்ந்தேன். 'கலீல் கிப்ரான்' புத்தகம் அருகில் இருந்தது.

என் பார்வையைக் கவனித்தவர், ''உனக்குப் புத்தகங்கள் படிக்கிறதுல விருப்பம் உண்டா? என்றார்.

''தமிழ் வாரப் பத்திரிகைகளைப் புரட்டறதோட சரி.''

''அடாடா, நிறைய மிஸ் பண்ணிட்டியே. கலீல் கிப்ரான், ஜே. கே., விவேகானந்தர் புத்தகங்கள் எல்லாம் படிச்சா மனசு விசாலமாகும்.''

''எனக்கு அதுக்கெல்லாம் நேரம் இருக்கிறதில்லை. காலைல ஆபீஸ், ஆபீஸ் விட்டா வீடு. டீ.வி, தூக்கம் அவ்வளவுதான்'' என்று சொல்லும் போதே சிரித்துவிட்டேன்.

''எதுக்குச் சிரிக்கறே?''

''முதலிரவு நேரத்துல நாம பேசிக்கிறதை நினைச்சதும் சிரிப்பு வருது. நமக்கு வயசானதுனாலேதானே இப்படிப் பேசறோம்? இருபத்தி நாலு வயசுல கல்யாணமாகி

பட்டுக்கோட்டை பிரபாகர் எழுதும் புதிய தொடர்:

# வல்லமை தாராயோ..?



இருந்தா, உனக்குக் கமலைப் பிடிக்குமா, கார்த்திக்கைப் பிடிக்குமா, இல்லை மாதுரி தீட்சித்தா, மீனாட்சி சேஷாத்திரியான்னு பேச்சு இருந்திருக்கும் இல்லை?''

பதில் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தார்.

''உண்மைதான் கலா. இப்போதெல்லாம் மூணுமணி நேரம் உட்கார்ந்து சினிமா பார்க்கிற பொறுமையே போயிடுச்சு. ஏதோ நேரத்தை வீணாக்குகிற மாதிரி ஒரு ஃபீலிங் வந்திடுது.''

''அது சரி, ஏன் நீங்க இவ்வளவு லேட்டா திருமணம் பண்ணிக்கிட்டீங்க?''

''உனக்காகக் காத்திருந்தேனோ என்னவோ?'' என்றார் புன்னகையுடன்.

அவர் பதில் மனத்துக்கு இதமாயிருந்தது.

''எனக்கு விவரம் தெரியறதுக்கு முன்னாடியே அப்பா அம்மா இறந்துட்டாங்க. மாமா வீட்லதான் வளர்ந்தேன். எஸ்.எஸ்.எல்.சி க்கு மேலே அவங்க என்னைப் படிக்க வைக்கல. மாமியோட கொடுமை தாங்காம மெட்றாஸுக்குத் திருட்டு ரயிலேறி வந்திட்டேன். இப்ப வேலை பார்க்கிற பிரைவேட் கம்பெனியில சாதாரண எடுபிடியாச் சேர்ந்து கொஞ்சங்கொஞ்சமா மேலே வந்து இப்ப ஹெட்கிளார்க் காயிட்டேன். நான் அனாதைங்கற தாழ்மை உணர்ச்சியினால யாரோடும் அதிகமாப் பேசமாட்டேன். அப்படியே தனிமை பழகிப் போச்சு. புத்தகங்கள் சிநேகமாச்சு. மாமாவுக்குத் திடீர்னு என்னைப்பற்றி ஞாபகம் வந்தது. உன்னைப் பத்திச் சொன்னார். உன்னைப் பெண் பார்க்கவற்புறுத்தி அழைச்சுட்டு வந்தார். உன்னைப் பார்த்ததும் என்னமோ தெரியலே, தலையாட்டிட்டேன்.''

என்னை விட அவர் நிலை பரிதாபம் என்று புரிந்தது.

எனக்கு வயதாகி விட்டது என்ற ஒரு குறைதான். இவருக்கு 'தான் அனாதை' என்ற குறையும் கூட இருப்பது நினைத்து என் மனம் இளகிவிட்டது.

''இத்தனை நாளா தனிக்கட்டையா இருந்தேன். இதுக்கு மேலே ஒரு பொண்ணோட அட்ஜெஸ்ட் பண்ணிக் குடும்பம் நடத்த முடியுமான்ற சந்தேகம் மனசுல இருந்துக்கிட்டே இருக்கு. ஆனாலும், 'நான் அனாதை இல்லை, எனக்குன்னு இப்ப ஒருத்தி இருக்கா, ஒரு குடும்பம் இருக்குன்னு நினைக்கிறப்போ ரொம்ப சந்தோஷமா இருக்கு....''

அவரின் ஊஞ்சலாட்டம் புரிந்தது.

'பத்துவயசுப் பிள்ளையை வளர்க்க வேண்டிய வயசுல, கல்யாணம் பண்ணிக்கிறானா?' என்று ஆபீசில் ஆண் சகா ஒருவர் கிண்டலடித்தது ஞாபகம் வந்தது.

இதோ நாற்பது வயதில் எனக்கு ஒரு குழந்தை கிடைத்திருக்கிறார். அவருக்குத் தாயாய், மனைவியாய், தோழியாய் எல்லாமுமாய் இருப்பேன்.

அவரை வாஞ்சையுடன் ஏறிட்டேன்.

என்னிடம் இதுவரை இருந்த தயக்கமெல்லாம் பறந்துபோய், மாறாக நெஞ்சில் இனம்புரியாத பாசம் அவர்மேல் சுரப்பதை உணர்ந்தேன்.

அவர் கையைப் பற்றி மென்மையாக முத்தமிட்டேன்.

# கிழவருக்கு வயது நான்கு!



'ஐயா, பெரியவரே! இவ்வளவு வயதான காலத்தில் மிகவும் சிரமப்பட்டு மாங்கன்றை நடுகிறீர்களே, உங்களுக்கு என்ன வயதிருக்கும்?' என்று இளைஞன் ஒருவன் கேட்டான்.

'எனக்கு நான்கு வயது ஆகின்றது என்றார்.

'என்ன சொல்கிறீர் பெரியவரே?'

'ஒரு மனிதன் இந்த உலகத்தில் தனக்காக மட்டும் வாழ்ந்த நாட்கள் வீண் நாட்களே. எப்பொழுது பிறருக்காக வாழத் தொடங்குகின்றானோ அப்பொழுதுதான் அவனுடைய உண்மையான வயது தொடங்குகிறது. அந்த முறையில் பார்க்கப் போனால் நான் பிறருக்காக வாழ ஆரம்பித்து நான்கு ஆண்டுகள் மட்டும் ஆகின்றன.. சரி, உன் வயதென்ன?' என்று கேட்டார்.

'நான் இப்போதுதான் பிறந்துள்ளேன்' என்று பதிலளித்தான்.

('குட்டிக் கதைகள்' என்னும் நூலிலிருந்து.)

— டி. கே. பானு

# தீபாவளி இனிப்புச்செய்தி!

**இல்லங்கள் தோறும் புதுமணம்**
**எங்கும் மகிழ்ச்சியின் ஆரவாரம்**
**சுற்றமும் நட்பும் கூடிக் கொண்டாடும் சுபதினம்.**

ஏராளமான மக்களின் சௌகரியத்திற்காக நாங்கள் புதியதொரு கிளையை **65, சி.பி. ராமஸ்வாமி ரோடு, அபிராமபுரம், சென்னை-600 018ல்** திறந்திருக்கிறோம் என்பதை மிக்க மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

தேர்ந்தெடுக்கப்பட்ட பொருட்களால் அனுபவமிக்க சமையல் கலை வல்லுனர்களால் செய்யப்படும் எங்களது இனிப்பு மற்றும் கார வகைகள் உயர்தரமட்டுமல்லாது நல்ல சுவையும் கொண்டவை.

உங்களது வருகை ஒரு இனிமையான அனுபவமாக அமையும் என்பது உறுதி. வாடிக்கையாளர்களின் முழுமையான திருப்தியே எங்கள் நோக்கம்.

இன்றே விஜயம் செய்வீர்:

## ஸாய் கிருஷ்ணா
## ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

**(AIR-CONDITIONED)**

65, சி.பி. ராமஸ்வாமி ரோடு
அபிராமபுரம், சென்னை-600 018
போன்: **458407**



# ஞானம் மாமி

"அம்மாஞ்சி! சித்த இங்கே வாங்கோ..."

"ஏன்? என்னாச்சு ஞானம்?"

"இதென்ன கத்தரிக்கான்னு வாங்கிண்டு வந்திருக்கேள்? ராமபாணம் போட்டாப்பல காய் முழுக்க ஒரே பொத்தல். ஒரு காய் கூட முழுசா தேறாது போலிருக்கு."

"ஐய்யய்யோ! நல்லதா பொறுக்கிப் போடுப்பான்னு சொன்னேனே!"

"நீங்களும் சொன்னேள், அவனும் போட்டுட்டான்! எவ்வளவு குடுத்தேள்?"

"எம்பது பைசா."

"காசு கரி...! ஐய்யய்யோ பிராமணா! ஒங்களோட நான் என்ன சேவேன்!"

"இன்னும் என்ன பண்ணிட்டேம்மா?"

— சிவதாணு மாமாவின் குரலில் அங்கலாய்ப்பு தொனித்தது.

"ஒங்களைப் பசலைக் கீரைதானே வாங்கிண்டு வரச் சொன்னேன். நீங்க என்ன வாங்கிண்டு வந்தேள்?"

"பசலைக் கீரை..."

"அது பசலைக் கீரையில்லே அம்மாஞ்சி; முள்ளங்கிக் கீரை. குப்பைல போட வச்சிருந்தவன் ஒங்களைக் கண்டதும் தலைல கட்டி அனுப்பிச்சுட்டான்."

"ஐய்யய்யோ!"

வந்த சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். ஞானம் மாமி வீட்டிற்கும் எங்கள் வீட்டிற்கும் நடுவில் ஒற்றைக் கல் சுவர்தானாகையால் எங்கள் வீட்டு முற்றத்துப் பெஞ்சில் உட்கார்ந்தால் அவர்கள் வீட்டில் பேசுவது முழுதையும் ஓர் எழுத்து விடாமல் கேட்டு விடலாம்.

என் கணவர் காலையில் வெகு சீக்கிரமே பக்கத்து டவுனிலிருந்த தொழிற்சாலைக்குப் போய் விடுவார். தனியாக இருந்த எனக்கு, ஞானம் மாமி – சிவதாணு மாமாவின் உரையாடலைக் கேட்பதுதான் சுவையானதொரு பொழுதுபோக்கு. மாமிக்கு ஏகப்பட்ட நகைச்சுவையுணர்வாதலால், சில சமயம் அவர்களது பேச்சு நல்ல



தொரு நகைச்சுவை நாடகத்தைக் கேட்பது போலிருக்கும்.

சிவதாணு மாமா உண்மையிலேயே மாமிக்கு மாமா மகன்தான். இடைவெட்டாகப் பேசும் சந்தர்ப்பங்களில் மட்டும் மாமாவை உறவு முறை சொல்லி 'அம்மாஞ்சி' என்றழைப்பார் மாமி.

''தன் சாதுப் பிள்ளைக்கு வெளியிலேயிருந்து பெண் கொண்டு வந்தால் குடியைக் கெடுத்துடுவான்னு என் மாமிக்கு பயம்; எங்கம்மா உசிரை வாங்கி என்னை மாட்டுப் பெண்ணாக்கிண்டுட்டா'' என்று சிரிப்பார் மாமி. ஆனால் குரலில் வருத்தமிராது. மாமாவையும், வயதாலேயும், உடம்பாலேயும் வளர்ந்துவிட்டதொரு குழந்தை என்பது போல் கவனித்துக் கொள்ளுவார். மாமாவுக்குக் காலில் முள் தைத்தால் 'மாமிக்குக் கண்ணில் இரத்தம் வரும்.

''சாப்பிட வர்றேளா? சுருக்கச் சாப்பிட்டுட்டு வெயிலுக்கு முன்னாடி கிளம்பிப் போய் வாடகையெல்லாம் வாங்கிண்டு வந்துடுங்கோ. ஒங்களுக்குச் சீக்கிரமா சாதம் போட்டுக் கிளப்பி விடணும்னே இன்னிக்கி நான் பாக்கிக் காரியத்தையெல்லாம் அப்படி அப்படியே போட்டுட்டுச் சமையல் பண்ணினேன். உம்! உம்! எழுந்திருந்து வாங்கோ.''

''வந்துட்டேம்மா; வர்றேன், வர்றேன். மூக்குல தும்பைச் சாத்தைப் புழியறயே!''

— சிவதாணு மாமா மாமியை ஒரு காலும் 'ம்' போட்டுப் பேச மாட்டார். எப்பவும் 'என்னம்மா, வாம்மா' என்றுதான் பேசுவார்.

''இதென்னது? என்னமோ முள்ளங்கிக் கீரைன்னியே அதுவா? ரொம்ப நன்னாருக்கே! அற்புதமா பண்ணியிருக்கியே!''

''என்ன செய்யறது? நீங்க வாங்கிண்டு வந்துட்டேள், காசைக் குடுத்து. குப்பைல எறிய எனக்கு மனசாகலே. துளி பயத்தம் பருப்பைச் சேர்த்து, தேங்காய்த் துருவலைத் தூவிப் பார்ப்போம்னு பண்ணினேன். நன்னா அமைஞ்சுடுத்தாக்கும்.''

''என்ன இருந்தாலும் நீ கெட்டிக்காரிதான் ஞானம்.''

''ஐயய்யே, எதுக்கு இந்தப் பட்டுக்குல்லா? இன்னும் கொஞ்சம் போடட்டுமா? என்ன, வரவர ஒழுங்காவே சாப்பிடறதில்லே?''

''ஐயோ, ஐயோ, எல்லாத்தையும் என் இலையிலேயே கவுக்கறியே! ஒனக்கு வைச்சுக்கோ.''

''போறுமே! ரொம்பத்தான் கரிசனம்!''

''உன் பேர்ல எனக்கு அக்கறையில்லேங்கறியா?''

''சரி, சரி. சாப்பிட்டாச்சோல்லியோ? சட்டுபுட்டுன்னு கிளம்பற வழியைப் பாருங்கோ. ஒங்களைக் கிளப்பி விட்டுட்டு எனக்குக் கொள்ளை காரியம் கிடக்கு — துணி மூட்டை கிட்ந்து உறுமறது; தோய்ச்சுக் கரையேத்தியாகணும். நீங்களே நாலு வேஷ்டி போட்டிருக்கேளே...''

''அது வந்து, எல்லாரும் எப்படியோ மொழங்காலுக்கு மேலே வேஷ்டியைத் தூக்கிக் கட்டிண்டு வளைய வர்றாளே. எனக்கு என்னவோ, என்ன சேறா, சகதியா இருந்தாலும் வேஷ்டியைத் தூக்கிண்டு நடக்க ரொம்பச் சங்கடமா இருக்கும்மா.''

''ஐயே, போறுமே! ஓங்களைப் பத்தி எங்கிட்டச் சொல்லிக்கிறேளாக்கும்! பொறந்த வீட்டுப் பெருமையை ஒடப் பொறந்தானோட குலாவிண்டாளாம்! என்ன கிளம்பியாச்சா? குடையை எடுத்துண்டேளா? பாஸ் புக் எடுத்துண்டாச்சா?''

''எல்லாம் எடுத்துண்டாச்சு.''

''எல்லார் கிட்டேயும் வாடகையை வசூல் பண்ணி, பாங்க் மூடறதுக்குள்ளே போயி பணத்தைக் கட்டிடுங்கோ. ஒருத்தர் கிட்டேயும் வளவளன்னு பேசிண்டு நிக்காதேங்கோ. என்ன புரிஞ்சுதா?''

''சரிம்மா! சரி சரி.''

''அவன் — அதான் அந்த கண்ணுச்சாமி — 'இந்த மாசம் கொஞ்சம் டிஃபி

ஜயலக்ஷ்மி

கல்ட் ஸார்'னு தலையைச் சொறிஞ்சான்னா, 'அதுனாலென்ன அடுத்த மாசம் குடுங்கோ. என் ஒய்ஃப் கெட்டிக்காரி. எப்படியோ பார்த்துப்பா'ன்னுட்டு வந்துடாதேங்கோ. இதோ பிரசவத்துக்கு வரப் போறா; தலைக்கு மேல் செலவிருக்கு.''

சற்றைக்கெல்லாம் கிணற்றடியிலிருந்து மாமியின் குரல் கேட்டது.

''பட்டு... பட்டம்மா கொஞ்சம் வந்து முதுகு தேய்ச்சு விட்டுட்டுப் போறயாம்மா? ரொம்ப நாளாயிடுத்தே...''

மாமி முதுகு தேய்க்கக் கூப்பிடுகிறாரென்றால் நிச்சயமாக மனசில் ஏதோ பளு இருக்கு. அதை எங்கிட்ட எறக்கப் போறார்னு அர்த்தம். அதையும் மாமி ரொம்ப சுவைபடச் செய்வாரானதால் நான் ஆவலாக ஓடுவேன்.

மாமிக்கு முதுகு தேய்த்து விட்டு, சமையலறைக்குப் போகும் வாசற்படியில் உட்கார்ந்தேன்.

''என்னதான் அவர் அப்பாவித்தனத்தையும் கபடில்லாத சுபாவத்தையும் பெருமையா நெனச்சிண்டு அரவணைச்சிண்டு போனாலும் சில சமயம் ரொம்ப ஆயாசமா வறதுடி பட்டு. இன்னிக்கித்தான் பாரேன். பசலைக் கீரைக்குப் பதிலா முள்ளங்கிக் கீரையை வாங்கிண்டு வந்து நிக்கறார் இவர்! எத்தனை தடவை பசலைக் கீரை சாப்பிட்டிருக்கார்; பார்த்திருக்கார்? இவரோட என்னடி பண்றது?''

நான் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். மாமி தன் போக்கில் தொடர்ந்தார்.

''நல்லவேளை! பெரியவா ரெண்டு மூணு வீடும் கொஞ்சம் நெலம் நீச்சும் வச்சிட்டுப் போனாளோ நான் பொழைச்சேனோ இல்லாட்டா, பொண்களுக்குக் கல்யாணம் பண்ணி, புள்ளைகளைப் படிக்க வச்சு, எப்படி கரை காண்றது? என்ன பட்டு?''

''ஐய்யோ, கஷ்டந்தான் மாமி.''

''குடுத்தனமும் எப்படி? செவ்வா, வெள்ளின்னு ஜாடை மாடையா சொல்லி, புரியாட்டா புட்டுப் புட்டுச் சொல்லிப் புரிய வச்சுப் பொண்ணையும் புள்ளையையும் பெத்து... என்னவோ போ எல்லாத்தையும் வளர்த்து ஆளாக்கி, ஒரு வழியும் பண்ணி விட்டாச்சு. இனிமே அதுக பாடு அதுகளைப் படைச்சவன் பாடு... ஸ்... ஆ...''

பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தவள் திடுக்கிட்டேன்.

''ஒண்ணுமில்லேம்மா. பேச்சு சுவாரஸ்யத்துல பொறங்காலை அதிகமாத் தேச்சுட்டேன் போலிருக்கு...''

''ஐய்யோ மாமி இரத்தம் வந்துடுத்தே! உள்ளே போய்க் காலைத் தொடச்சு மருந்து போட்டுண்டு, காஞ்ச பொடவையை உடுத்திண்டு சாப்பிடுங்கோ. நான் துணியையெல்லாம் உலர்த்தித் தர்றேன்'' என்றவாறு ஈரத் துணிகளை அள்ளிக் கொண்டு ஓடினேன்.

இது நடந்து நாலைந்து நாட்களாகியிருக்கும். பொழுது புலர்ந்ததும் புலராததுமான சமயம்;

'சில்லுன்னு பூத்த
நெறிஞ்சிக் காட்டுடே
நில்லுன்னு என்னை வழி
நிறுத்திப் போனீரே'

என்ற ஈனமான அழுகுரல் கேட்டது.

''ஐயைய்யோ ஞானம் மாமி போலிருக்கே!''

வயிற்றில் இமயத்தின் பனியவ்வளவையும் சுமந்து கொண்டு, கணவர் பின்தொடரப் பதறிக் கொண்டு போனேன்.

ஞானம் மாமியேதான். தலைவிரி கோலமாக அழுது கொண்டிருந்தார்.

சிவதாணு மாமா தாழ்வாரத்தில் கிடத்தப் பட்டிருந்தார். தலைமாட்டில் குத்து விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

''போய்ட்டார்டி பட்டு; மாமா போய்ட்டார்டி. குடிக்க ஜலம் கொண்டா ஞானம்னு கேட்டவர் குடிக்கப் போதில்லாம போயிட்டார்டி. ஐய்யோ நான் என்ன பண்ணுவேம்மா!''

மாமி பலவும் சொல்லி ஏங்கி ஏங்கி அழுதார்.

பிறகென்ன? பிள்ளை பெண்களுக்குத் தகவல் தெரிவித்து, அவர்கள் வந்து – சிவதாணு மாமா கதையாகி விட்டார்.

மாமாவின் காரியங்களெல்லாம் முடிந்து, பதின்மூன்றாம் நாள் 'சுப ஸ்வீகரணத்தன்று சாப்பாடு முடிந்தது. இந்தப் பதின்மூன்று நாட்களுக்குள் பிடியில் அடங்கி விடுவார் போல ஒடுங்கி விட்ட மாமியைப் பார்க்கப் பார்க்க வேதனை வயிற்றைப் பிசைய, வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவிக் கொண்டிருந்தவளை, ஜாடை காட்டித் தன்னருகில் அழைத்தார் மாமி.

''பட்டு இத்தனை நாள் அவரிருந்த தைரியத்துல எனக்கு நிகரில்லைன்னு நடமாடிண்டிருந்தேன். குடும்பக் காரியம் அத்தனையும் நான்தான் செஞ்சேன்; ஆனா அவரை முன்னாடி நிறுத்திண்டு செஞ்

---

பணத்தைவிட மகிழ்ச்சியில் ஒரு பெரிய வசதி இருக்கிறது. மகிழ்ச்சியை யாரும் கடன் கேட்க மாட்டார்கள்!

— பிரிக்வொர்க்.

— புத்தனாம்பட்டி கி. மணி.



சேன். அப்பாவியா இருந்தாலும் எனக்கு ஆனை பலமா இருந்தார். இனிமேல் என்னடி செய்யப் போறேன் பட்டு? இனிமேல் இதுக என்னை எப்படிப் பந்தாடப் போறது களோ?''

மாமி அடங்கிய குரலில் சொல்லி விசித்தார். அவர் பார்வை கதவை அரை மூடலாகச் சாத்திக் கொண்டு ஏதோ தீவிரமாக விவாதித்துக் கொண்டிருந்த பெண், பிள்ளைகளின் பக்கம் சென்றது.

மாமியை இதமாக அணைத்துக் கொள்ளத்தான் என்னால் முடிந்தது.

திடீரென்று அறையில் குரல்கள் ஓங்கின.

''என்னதிது? அசட்டுத்தனமா என்னமோ நீங்கள்ளாம் தனக்குத்தானே எல்லாத்தையும் தீர்மானிக்கறேள்? அம்மாவைக் கேக்க வேண்டாமா?''

— மூத்த பிள்ளை.

''அசட்டுத்தனம் என்னன்னா? இனிமே அம்மாவால் தனியா எல்லாத்தையும் நிர்வாகம் பண்ண முடியுமா? எல்லாத்தையும் வித்து, அம்மா பேர்ல கொஞ்சம் பணம் போட்டுட்டுப் பாக்கியைப் பிரிச்சிக்க வேண்டியதுதான். ஆளுக்குக் கொஞ்ச நாளா அம்மா நம்ம கூட இருந்துட்டுப் போறா. தனியா இருந்தா என்ன செய்யப் போறா?''

''அப்புறமா, நான் புதுசா ஒரு பிஸினஸ் ஆரம்பிக்கப் போறேன். இதை நான் அப்பா இருக்கிறபோதே ப்ரபோஸ் பண்றதாத் தானிருந்தேன். அன்ஃபார்சுனேட்லி அதுக்குள்ள இப்படியெல்லாம் ஆயிடுத்து...''

— இளையவன் ராஜு

''எதுவாயிருந்தாலும் இப்பத்து சட்டப்படி பெண்களுக்கும் பங்குண்டு.''

— பெண்

''அதான் கல்யாணத்தும் போது போத்துப் போத்தா குடுத்தாச்சே?''

— மருமகன்

''அதெப்படி...''

அதற்கு மேல் கேட்க வாய்ப்பில்லாதபடி, நெற்றி நரம்புகள் புடைத்து உதடுகள் துடித்த ஞானம் மாமி என் கவனத்தை ஈர்த்துக் கொண்டார்.

''பார்த்தியாடி பட்டு நான் சொன்னேனே! சொன்னேனே!'' என்று மாமி எந்த நிமிடமும் வெடிக்கப் போகிறாரென்று பயந்தவள், ''மாமி ப்ளீஸ்'' என்ற இறைஞ்சுதலுடன் அவர் கைகளைப் பற்றிக் கொண்டேன்.

ஒரு கணம் — ஒரே ஒரு கணம்தான். சற்று முன்னர் கண்ட முகமாற்றம் வெறும் கற்பனைதானோ என்று திகைக்குமளவிற்கு மாமி சகஜமானார்.

''குழந்தைகளா!''

மாமியின் குரலில் அச்சமூட்டும் அமைதி. சங்கடமான சிறு மௌனத்தைத் தொடர்ந்து

18 ஆம் பக்கப்புதிர் விடை:

காஞ்சிபுரம்.

— விருதை ராஜா.



அறையிலிருந்தவர்கள் வெளியே வந்தார்கள்.

''உக்காருங்கோ.''

மாமி தொண்டையைச் செருமிக் கொண்டார்.

''அப்பா போயிட்டார். ஒரே எம்புல குதிச்சிண்டு போயிட்டார். எனக்கும் வயசாறது; நானும்...''

''அம்மா!''

கையமர்த்திக் குறுக்கீட்டை மௌனப்படுத்தினார் மாமி.

''நானும் ஒரு நாள் போகத்தான் போறேன். போறத்தே ஒண்ணையும் எடுத்துண்டு போகப் போறதில்லே. ஆனா, உசிர் இருக்கற வரைக்கும் எல்லாருக்கும் — அது எவ்வளவு குறுகினதா இருந்தாலும் — எதிர்காலம்னு ஒண்ணு இருக்கு; அதை அவரவர் இஷ்டப்படி வாழவும் உரிமையிருக்கு. வயசானவான்னா மூட்டை முடிச்சில்லேப்பா, 'அங்கே கொஞ்ச நாள் இங்கே கொஞ்ச நாள்'னு உருட்டி விட. கையில காலில தெம்பிருக்கிற வரைக்கும் என் முயற்சியில் வாழறதுதான் எனக்குப் பெருமை. உங்களுடன் வந்து, உங்கள் நிழலா மூச்சு விட்டுண்டிருக்கிறது என்னைப் பொருத்த வரைக்கும் முடியாத காரியண்டா குழந்தைகளா!

''ராஜு, அம்மா நம்ம பிஸினஸ் முயற்சிக்குப் பணம் தர மாட்டேன்னுட்டான்னு மனஸ்தாபப்படாதே. சொந்தமா பாடுபட்டுச் சாதிக்கற காரியங்களுக்கு மகிமை அதிகம்டா கொழந்தே!

''இதோ, கரும்பு இனிக்கறதுன்னு வேரோட கல்லக் கூடாதும்மா! மாட்டுப் பொண்ணே! நீ இந்த வீட்டுக்கு வந்து ஒரு வருஷத்துக்கு மேலாறது; ஆனா இன்னமும் நீ கடுகளவு கூட இந்த வீட்டோடு ஒட்டலே. நீ உண்மையில இந்த வீட்டு மாட்டுப் பொண்ணானப்பறம், எதெதை யார் யாருக்குக் குடுக்கணும், எப்படி எப்படி செய்யணும்னு சொல்ற உரிமை உனக்குத்தானா வரும். அது வரைக்கும் நீ பொறுமையா இருக்கணும்.''

பெயர்த்தெடுக்கலாம் போன்று அங்கு கனத்த அமைதியும் நிலம் நோக்கிய கண்களும் பெரும் சங்கடத்தை ஏற்படுத்தவே, மெல்ல எழுந்து என் வீட்டை நோக்கி நகர்ந்தேன்.

ஞானம் மாமியின் புது உருவம் மனம் முழுதையும் வியப்பில் நிறைத்திருந்தது.




வண்ணப்படம்: தம்பையா.

**தீபாவளி மலர்களுள் கோபுரத்தைப் போல் உயர்ந்து விளங்குவது....**

**வண்ண மடல்களின் வரிசை:**

- **விக்னம் தீர்க்கும் விநாயகர்:**
காஞ்சி முனிவரின் அருள்வாக்குகளுக்கு ஓவியங்கள்: விஜு.

- **ஆப்பிரிக்கக் கானகத்தின் அதிசயங்கள்!**
கட்டுரை, வண்ணப்படங்கள்: கோபுலு.

- **ஸ்ரீசைலம்:**
திருத்தலத்தின் அற்புதமான காட்சிகள்; மல்லிகார் ஜுனர் பிரமராம்பா ஓவியங்கள்: தனுக.

- **இலக்கியத்தில் மடல்:**
கட்டுரை: மீ. ப. சோமு; சித்திரங்கள்: ம. செ.; மாருதி.

- **கலை வளர்க்கும் கரங்கள்:**
தந்தம், மரம், கல், சந்தன மரம் ஆகியவற்றில் அரிய அழகிய சிற்பங்களும் அவற்றை உருவாக்கும் சிற்பி களும். கட்டுரை: கப்ரபாலன்; படங்கள்: யோகா.

- **இந்திய நடனக் கலைகள்:**
கட்டுரை: டி. எஸ். பார்த்தசாரதி. பல்வேறு வகை இந்திய நடனங்களின் கண் கவர் தோற்றங்கள்.

- **உலா வரும் இறைவன்**
பக்தர்கள் இறைவனைத் தேடிச் செல்வது மட்டுமா? இறைவனும்தான் நம்மை நாடி வருகிறார்! பரவசத்தில் ஆழ்த்தும் வண்ணப்படங்கள்: தம்பையா.

- **விண்வெளியில் வாயேஜர்:**
பிரமிக்க வைக்கும் வண்ண ஓவியம்: விஞ்ஞானத் தகவல்கள்.

- **நச்சுப் பொய்கை:**
ராஜாஜியின் மகாபாரதக் கதைக்கு வண்ண ஓவியம்: வேதா.

- **கவிதை மடல்:**
வைரமுத்து; இளங்கம்பன்; நா. சி. வரதராஜன், நிர்மலா சுரேஷ் — கண்ணைப் பறிக்கும் வண்ண ஓவியங்களுடன்.

- **கங்கா ஸ்நானம் ஆச்சா?**
எண்ணெய் செடி, பூவில் தொடங்கி தீபாவளியன்று எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டு விளக்கேற்று வது வரை 'கேமிரா கட்டுரை': ஸ்ரீஹரி.

- **செங்கமலச் செந்திரு:**
திருமகளின் பல்வேறு தோற்றங்களை வண்ண மட லாக்கித் தருபவர் ஓவியர் எஸ். ராஜம்.

- **குரு பரம்பரை:**
காஞ்சி முனிவர், பீடாதிபதி, இளவல் தவிர, ஸ்ரீரங்கம் ஸ்ரீ ஆண்டவன் சுவாமிகளின் திருவுரு வங்கள்.

- **மற்றும்:**
கோகுலம் பக்கங்கள்; மங்கையர் மலர்; ஏராளமான சிறுகதைகள், கட்டுரைகள், புகைப்படங்கள், நகைச் சுவை அம்சங்கள், குறுநாவல்.

உங்கள் பிரதிக்கு உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். அல்லது கல்கி காரியாலயத்துக்கு எழுதுங்கள்.

**விலை ரூ. 30/-**

பதிவுத் தபாலில் பெற ரூ. 7/- சேர்த்து அனுப்ப வேண்டும்.

மானேஜர், கல்கி, சென்னை — 600 032.

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VII

ராஜ்மோகன் காந்தி

11



* ''கட்சி வேறு ஆட்சி வேறு''

இந்திரா காந்தி ஓராண்டுக் காலம் பிரதமராகப் பதவி வகித்திருந்தார். அடுத்த தேர்தலும் வந்துவிட்டது. இந்த ஓராண்டுக் காலத்தில் வறட்சியும், வேலை நிறுத்தங்களும், பணவீக்கமும், கலவரக் கிளர்ச்சிகளும் காங்கிரஸின் செல்வாக்கைத் தகர்த்து, எதிர்க்கட்சிகளின் நிலையைப் பலப்படுத்தியிருந்தன. நேரு இல்லாத ஒரு தேர்தலை எதிர்க்கட்சியினர் ஆர்வத்துடன்

# காங்கிரஸ் ஏகாதிபத்தியம் தகர்ந்தது!

எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். இந்திராவிடம் இருந்த சில குணங்களையும் அவரது சில காரியங்களையும் ஸி. ஆர். நல்லவை என ஏற்கவும், அவற்றைப் பாராட்டவும் தயாராக இருந்தார். தங்கக் கட்டுப்பாடுச் சட்டத்தை இந்திரா வாபஸ் பெற்றது; வரிகளைக் குறைப்பது பற்றியும் நில வரியை ஒழித்துக் கட்டுவது பற்றியும் யோசித்து முடிவு எடுக்க அவர் தயாராக இருந்தது; தொழில் துறையில் இருந்த கட்டுப்பாடுகளை ஓரளவுக்கு அவர் தளர்த்தியது; புதிய சிந்தனைகளை வெளியிட்டது முதலியன ஸி. ஆரின் வரவேற்பைப் பெற்றன. தனிப்பட்ட முறையிலும் ஸி.ஆரை இந்திரா நெகிழ வைத்திருந்தார். ஸி. ஆரின் பிறந்த நாளுக்கு ஒரு வாழ்த்துத் தந்தி அனுப்பியிருந்தார். தவிர, ராஜாஜியின் உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்த போது அயல் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட மருந்துகள், அரசாங்கச் சிவப்பு நாடாவால் பாதிக்கப்படாமல், தாமதமின்றி அவருக்குக் கிடைக்க வேண்டும் என்பதில் அக்கறை காட்டியிருந்தார்.

இந்திராவின் செயல்பாடுகள் சிலவற்றை ராஜாஜி பாராட்டினாலும், கூடவே, சுதந்தராக் கட்சியின் வளர்ந்து வரும் செல்வாக்குதான் காங்கிரஸ் கொள்கைகளில் சில மாற்றங்கள் நிகழ்ந்து வரக் காரணம் என்பதையும் வலியுறுத்தி வந்தார். இந்த வாதம் எதிர்பார்க்கக் கூடியதுதான். இதே நேரத்தில் இந்திரா தவறு செய்தால் அதனைக் கண்டிக்கவும் ஸி. ஆர். தயங்கியதேயில்லை. இவ்விஷயத்தில் ஒரு பள்ளி ஆசிரியரைப் போல அவர் நடந்து கொண்டு தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்துவார்! உதாரணமாக, இந்திரா பதவி ஏற்ற சிறிது காலத்துக்கெல்லாம் மாஸ்கோவின் அழைப்பை ஏற்றுச் சென்றிருந்தார். அப்போது மேற்கத்திய நாடுகளைக் குறித்து ருஷ்ய அதிபர்கள் வழக்கமாகப் பயன்படுத்தும் ''ஏகாதிபத்தியவாதிகள்'' ''பிற்போக்காளர்கள்'' போன்ற சொற்களுக்கு இந்திரா மதிப்பளித்ததை சுயராஜ்யா கட்டுரையில் மட்டுமின்றி, தனிப்பட்ட கடிதத்திலும் கண்டித்திருந்தார்: ''மாஸ்கோவில் வெளியான கூட்டறிக்கையில் இந்தச் சொற்கள் இடம் பெற எப்படி அனுமதித்தீர்கள்? இது மிகவும் துரதிர்ஷ்டவசமானது.'' (28.7.66)

கட்சி மாறிகளாலும் சிலரது மரணங்களாலும் சுதந்திராக் கட்சி பாதிக்கப்பட்டது. என்றாலும் குஜராத்திலும் ராஜஸ்தானிலும் கணிசமான வளர்ச்சியும் காணப்பட்டது. தமிழ்நாட்டில் தி. மு. க. வுடன் இணைந்து, நம்பிக்கை அளித்த ஒரு செயல் திட்டத்தை வகுக்க முடிந்தது. ஒரிஸ்ஸாவில் தேர்தலுக்குப் பின் ஆட்சி அதிகாரத்தில் அமரக் கூடிய சாத்தியக்கூறு கூட சுதந்திராக் கட்சிக்கு இருந்தது.

சுதந்திராக் கட்சியின் தலைவர் என்ற முறையில் ஸி. ஆர்., ஜனநாயகப் பண்புகளையும் அதிகாரச் செல்வாக்கையும் ஒரே சமயத்தில் கடைப்பிடிக்கின்ற ஆற்றலைப் பெற்றிருந்தார்! இது பானு பிரதாப் சிங் கூறும் ஒரு சம்பவத்திலிருந்து தெளிவாகிறது. 1966 — இல் நடந்த சுதந்திராக் கட்சியின் தேசிய நிர்வாகக் குழுக் கூட்டம்



* தட்டிக் கொடுத்தலும் தட்டிக் கேட்டலும்!



* ''நோய்க் கிருமி அல்ல; ஆரோக்கியத்தின் அறிகுறி''

பற்றி அவர் சொல்கிறார்:

"இந்தியா அணு ஆயுதங்களைத் தயாரிக்க வேண்டும் என்று டாண்டேகர், எச்.எம். பட்டேல் தவிர நானும் பேசினேன். எங்களை வேறு சிலரும் ஆதரித்தனர். விவாதத்தின் போது ராஜாஜி மௌனமாக இருந்தார். இறுதியில் உணர்ச்சிமயமான ஒரு கோரிக்கையை அவர் விடுத்தார். இந்தியா என்றாவது ஒரு நாள் அணு ஆயுதம் தயாரிக்கும் என்பது தமக்குத் தெரியும் என்றார். ஆனால் யாராயிருந்தாலும் சரி, அதனைத் தயாரிப்பது தவறு என்று எடுத்துக்காட்டி எதிர்ப்பதே தமது வாழ்நாளின் முக்கியக் குறிக்கோள் என்றார். அதனால் நாங்கள் எங்கள் எதிர்ப்பை வாபஸ் பெற்றுக் கொண்டால் தாம் மகிழ்ச்சி அடைய முடியும் என்றார்.

"எல்லாரும் ராஜாஜியின் உணர்வுகளை மதித்து எதிர்ப்பை வாபஸ் பெற்றுக் கொண்டனர் — என்னைத் தவிர. ராஜாஜியின் தீர்மானம் நிறைவேறியது. ஆனால் நான் எனது எதிர்ப்பை அதில் பதிவு செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினேன்.

"சில மணி நேரம் சென்று ராஜாஜி எனக்குக் கார் அனுப்பி என்னை அவர் தங்கியிருந்த ஜாகைக்கு அழைத்து வரச் செய்தார். என்னை அவர் கண்டிக்கப் போகிறார் என்று நினைத்துக் கொண்டே போனேன். ஆனால் ராஜாஜி, நிர்வாகக் கமிட்டி உறுப்பினர் ஒருவர் தமது ஆழ்ந்த நம்பிக்கை ஒன்றினை விட்டுக் கொடுக்காமல் அதில் உறுதியாக நின்றது பற்றி மகிழ்ச்சி தெரிவித்தார்!"

தேர்தலை முன்னிட்டுக் கட்சிக்காக நன்கொடைகள் வசூலிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ராஜாஜிக்கு மீண்டும் ஏற்பட்டது. கட்சியை எதிர்பாராமல் தங்களுக்குத் தாங்களே பணம் செலவழித்துக் கொண்டு சுதந்திராக் கட்சி சார்பில் நிற்கக் கூடிய சில வர்த்தகர்களை ஈர்க்கவும் முயற்சி செய்தார். ஆனால் நன்கொடைப் போட்டியில் காங்கிரஸின் கிட்டத்தில் சுதந்திராக் கட்சியால் நெருங்க முடியவில்லை. மிகவும் பின்தங்கியே இருந்தது. "எனக்குக் கொடுத்தது போல் ஐந்து முதல் பத்து மடங்கு வரை காங்கிரஸுக்குத் தொழிலதிபர்களும் வர்த்தகர்களும் கொடுத்திருப்பதைக் காண்கிறேன்" என்றார் ஸி. ஆர். காங்கிரஸிடமிருந்து சலுகை பெற்றிருந்த, இனி பெறவிருந்த தொழிலதிபர்களால் அமைச்சர் வந்து கேட்ட போது இல்லை என்று கூற முடியவில்லை. "இது அச்சுறுத்திப் பணம் பறிப்பதாகும்" என்று ஸி. ஆர். கூறினார்.

காங்கிரஸுக்கு எதிராக எதிர்க் கட்சிகள் இணைவது என்பது சாத்தியமற்றதாகப் போனாலும் கூட்டணி அமைத்து தொகுதி உடன்பாடு காண முடிந்தது. ஒரிஸ்ஸாவில் சுதந்திராவும் ஜன காங்கிரஸும் கூட்டாக இணைந்து ஒரே தேர்தல் அறிக்கையை மக்களுக்கு அளித்தன. ராஜஸ்தானில் ஜனசங்கமும் சுதந்திராவும் தொகுதி உடன்பாடு செய்து கொண்டன.

தமிழ் நாட்டில் அண்ணாதுரையுடன் தமக்கிருந்த நட்பினைப் பயன்படுத்தி தி.மு.க. தலைமையில் ஒரு கூட்டணி அமைப்பதில் ஸி.ஆருக்குக் கணிசமான பங்கு இருந்தது. சுதந்திரா கட்சிக்குக் கூட்டணியில் சிறிய இடம்தான். ஆனால் அது பற்றி ஸி.ஆர். கவலைப்படவில்லை. தமது செல்வாக்கைப் பயன்படுத்தி தி. மு. க. வின் கொள்கைகளில் ஆரோக்கியமான மாறுதல்களைத் தம்மால் ஏற்படுத்த முடியும் என்று அவர் நம்பினார்.

தேர்தல் நெருங்க நெருங்க ஸி. ஆரின் தாக்குதல்கள் சூடுபிடித்துக் கூர்மையான ஆயுதங்களாகப் பாய்ந்தன. 'இந்தியா பாதுகாப்புச் சட்டமும் பல சாசனத் திருத்தங்களும் அரசியல் சாசனத்தைக் கொன்றே விட்டன' என்றார். 'அமெரிக்காவைத் துதி பாடுகிற பொருளாதாரமும், ருஷ்யாவை வளைய வருகிற அரசியலும் நாட்டைக் குட்டிச்சுவராக்கிக் கொண்டிருக்கின்றன' என்றார். வடக்கே சில இடங்களில் பட்டினிச் சாவுகள் நடந்திருப்பதைச் சுட்டிக் காட்டிய போது, 'ராஜாஜி தமிழ் நாட்டில் முதல்வராக இருந்த சமயம் இங்கே கூடத்தான் பட்டினிச் சாவுகள் நடந்திருக்கின்றன' என்றார் காமராஜர். இந்தக் குற்றச்சாட்டு தவறானது; அவ்வாறு நடக்கவில்லை என்று மறுப்பறிக்கை விட்டதுடன், நையாண்டியாக ஒரு கேள்வி பதிலும் எழுதினார் ஸி.ஆர்!

ஆசிரியர் (மாணவனைப் பார்த்து) "ஏம்பா நொண்டுகிறாய்?"

மாணவன்: "ஏனென்றால் பதினாலாம் நூற்றாண்டில் மாஸ்கோ முதல் வங்காளம் வரை அரசாண்ட டாமர்லேன் ஒரு நொண்டியாக இருந்தானே!"

காங்கிரஸைப் பதவி இறக்கிக் காட்ட வேண்டும் என்ற தமது லட்சியத்தில் தம் நிகரற்ற முறையில் அவர் உறுதியாகவும் தீவிரமாகவும் செயல்படுவது கண்டு, ஹிந்து பத்திரிகை, "இவரைப் போன்ற உறுதியும் சுறுசுறுப்பும் உள்ள ஒரு தலைவர் காங்கிரஸில் எதிர்காலத்திலேனும் தோன்றுவாரா?" என்று கேட்டிருந்தது.

தேர்தல் முடிவுகள் காங்கிரஸுக்கு வெற்றியே என்றாலும் பலத்த அடிவாங்காமல் அந்த வெற்றியை அது அடையவில்லை. 520க்கு 280 மக்களவை இடங்களை அது கைப்பற்றியிருந்தது. இது, முன்னர் இருந்த பலத்தை விட நூறு குறைவு! தவிர, எட்டு மாநிலங்களில் காங்கிரஸ் தோல்வியையே தழுவியிருந்தது! இவற்றுள் தமிழ் நாடும் ஒன்று என்பதில் ராஜாஜிக்கு அளவிட

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் காமிராக்கள்

# Snapper

Snapper 35










ஸ்நேப்பர் உங்கள் பணத்திற்கு உயர்ந்த மதிப்பைத் தருகிறது. எண்ணற்ற பலவித மாடல்கள். மற்றும் அது தனக்கே உரிய தனிப்பட்ட தரத்துடன் உருவாக்கும் ஒப்பிலா அம்சங்களைக் கொண்டது. அதனால்தான் இதர காமிராக்களுடன் ஒப்பிடுகையில் ஸ்நேப்பர் கணக்கற்ற மக்களின் புன்னகை சின்னமாக விளங்குகிறது.

**Snapper காமிராக்கள்** புன்னகையின் சின்னம்

விற்பனைக்கு விடுப்பது:
ஆக்ஃபா கேவார்ட் இந்தியா லிமிடெட்.

ULKA-12097 TAM

முடியாத மகிழ்ச்சி. மக்களவையில் சுதந்திரக் கட்சியின் பலம் இரட்டிப்பாகியிருந்தது. 22லிருந்து 44 ஆக உயர்ந்திருந்தது. குஜராத், ஒரிஸ்ஸா, தமிழ்நாடு ஆகியன, காங்கிரஸ் எம்.பிக்களை விட அதிகமாக சுதந்திரா எம்.பிக்களையே தேர்ந்தெடுத்திருந்தன! குஜராத்தில் முன்பு 26 ஆக இருந்த சுதந்திரா எம்.எல்.ஏக்கள் இப்போது 66 ஆக உயர்ந்திருந்தனர்! ராஜஸ்தானில் இந்த எண்ணிக்கை 38லிருந்து 49 ஆக உயர்ந்திருந்தது! ஒரிஸ்ஸாவில் ஜன காங்கிரஸையும் சேர்த்துக் கொண்டு சுதந்திரா கட்சி ஆட்சியே அமைத்து விட்டது!

காங்கிரஸ் ஏகாதிபத்தியம் என்பது முறியடிக்கப்பட்டு விட்டது! எல்லா முடிவுகளையும் விட இனிமையானவையாக ஸி.ஆருக்கு விளங்கியவை ஒரிஸ்ஸா, தமிழ்நாடு தேர்தல் முடிவுகளே. தமிழ் நாட்டில் காங்கிரஸ் வேரோடு பிடுங்கப்பட்டது போல் தோல்வியுற்றது மட்டுமல்ல; காமராஜரை ஒரு மாணவ வேட்பாளரே தோற்கடித்து விட்டார்! தமிழ் நாட்டிலிருந்து போட்டியிட்ட ஒவ்வொரு மத்திய மந்திரியும் தோற்றார்! தமிழக மந்திரி சபையில் இருந்த ஒரே ஒரு அமைச்சர் மட்டுமே தேர்தலில் வென்றார்!

''நோய்க் கிருமிகள் பரவிக் கொண்டிருக்கின்றன'' என்றார் தோல்வி கண்ட முதல்வர் பக்தவத்சலம். ஆனால் ஸி.ஆர்., ''இது அரசியல் ஆரோக்கியம் மலர்ந்ததின் அறிகுறி'' என்றார்.

தி. மு. க. அமைச்சரவை அமைந்தது. ''சுதந்திரா எம்.எல்.ஏக்கள் தனியே ஆதரவாளர்களாக அமர்வார்கள்'' என்றார் ஸி.ஆர்.

புதிய முதலமைச்சர் அண்ணாதுரை தமது கட்சிக்காரர்களிடம், ''கட்சி வேறு, ஆட்சி வேறு என்பதை உணருங்கள். நிரந்தரமாக உள்ள அதிகார வர்க்கத்தின் மீது கட்சிச் செல்வாக்கைச் செலுத்தி அவர்களை எதற்கும் வற்புறுத்த முயலாதீர்கள்'' என்ற போது ஸி.ஆர். மகிழ்ந்து போனார். ''எனக்கு இதுவே போதும்! தி. மு. க. விடமிருந்து இதற்கு அதிகமாக நான் எதையும் எதிர்பார்க்கவில்லை'' என்றார்.

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — பகுதி VIII கல்கி — பொங்கல் சிறப்பிதழில் ஆரம்பமாகும்.

# கல்கி வாசகர்களுக்குத் தீபாவளிப் பரிசு!



நீங்கள் நீண்ட நாட்களாக ஏதாவது ஒரு பொருளை வாங்க வேண்டும் என்று கனவு கண்டு வந்திருப்பீர்கள். உங்களைச் சொக்க வைக்கும் ஓர் ஆடியோ கேஸட், உங்களுக்குப் பிடித்த கதாசிரியரின் ஒரு புத்தகம், ஒரு நல்ல பவுண்டன் பேனா — எதிர்பாராத வேறு செலவினங்கள் வந்து நீங்கள் ஆசைப்பட்ட அந்தப் பொருளை வாங்கக் கை வராமலே போயிருக்கலாம்.

கல்கி தீபாவளி சிறப்பிதழின் தலையங்கப் பக்கத்தில் மேற்புறம் தேதிப் பகுதியைக் கவனியுங்கள். அங்கு தீபாவளிப் பரிசு முத்திரை பதித்து, ரூ 25, ரூ 50, ரூ 100 என்று பரிசுத் தொகை குறிப்பிட்டு, கல்கி ஆசிரியரின் கையெழுத்தும் இருக்கிறதா, பாருங்கள். அவ்வாறிருக்குமானால் அந்தப் பக்கத்தின் அம் மேல் பகுதியை மட்டும் கத்தரித்து எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். இதனை, நீங்கள் நெடு நாட்களாக ஆசைப்பட்டு வாங்க முடியாமல் தள்ளிக் கொண்டு போன பொருளை வாங்கியதற்கு உரிய — தேதியுடன் கூடிய — பில்லுடன் இணைத்து அனுப்பினால் கூப்பனில் குறிப்பிடப்பட்டுள்ள தொகை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கப்படும். கூப்பன் கிடைத்ததும் அதன் மதிப்புக்குக் கைமாற்றுப் பெற்றுக் கூட அப் பொருளை நீங்கள் வாங்கி விடலாமே? கூப்பனின் மதிப்புக்கு மேல் கைப்பணம் செலவழித்தும் நீங்கள் ஒரு பொருளை வாங்கலாம்; ஆட்சேபணை ஏது?

ஒரே ஒரு நிபந்தனை! நீங்கள் வெகு நாட்களாக வாங்க விருப்பப்பட்டு வந்த அந்தப் பொருள் என்ன? அதன் மீது உங்களுக்குப் பற்றுதல் விழக் காரணம் என்ன? அந்தப் பின்னணியைச் சுருக்கமாகவும் சுவையாகவும் (நகைச்சுவையாகவும்!) எங்களுக்கு எழுதி அனுப்ப வேண்டும்! இவற்றுள் பிரசுரத்துக்கு ஏற்கப்படும் துணுக்குகள் ஒவ்வொன்றுக்கும் தனியே ரூ 25/— பரிசு உண்டு!

**முடிவு தேதி: நவம்பர் 15, 1989.**

இந்தத் தேதிக்குப் பிறகு வரும் அனுபவக் குறிப்புக்கள், கூப்பன்கள் முதலியன பரிசு பெற மாட்டா.

— ஆசிரியர்.

# உங்கள் பால்காரர் இரவு 10 மணிக்கு பால் கொண்டு தருவாரா?

## என் பால்காரர் தருவார்

உங்கள் மகன் இரவு வெகுநேரம் படிக்க விரும்புகிறான். அவனுக்கு காப்பி வேண்டும். பாட்டியோ இரவு சாப்பாட்டுக்குப் பதிலாக பால் வேண்டும் என்கிறார். அந்த நேரத்தில் எங்கு சென்று பால் வாங்குவீர்கள்? அமுல் மில்க் பவுடர் கைவசம் வீட்டில் வைத்திருங்கள். கவலையே இருக்காது. பால் தாமதமாக வராது. தீர்ந்து போகாது. திரிந்தும் போகாது.

அமுல் மில்க் பவுடர் கொண்டு தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




**அமுல் மில்க் பவுடர்**

RADEUS/AMP/1-88-TAM

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ. ஆப்பரேடிவ் மில்க் மார்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001

OPERATION FLOOD

# என் உயிர்த் தோழன்

**அத்தியாயம் 27**
**சிந்திய செந்நீர்!**

தேர்தல் பணியில் ஈடுபட்டிருந்த கட்சித் தோழர்கள் அனைவருக்கும் அவரவர் வேலையைப் பிரித்துக் கொடுத்த தருமன், அடக்க இயலாத ஆவலுடன் அலுவலகத்திற்குப் புறப்பட்டான். அக்னி ஆதவன் தன்னை எதற்காக நேரில் பார்க்க விரும்பியிருப்பார் என்ற குழப்பத்திலிருந்தான் அவன்.

கட்சி அலுவலகம் அடைந்ததும் தருமன் காத்திருக்கும் செய்தி தென்னவனுக்கு அறிவிக்கப்பட்டது. மறுநிமிடம் தென்னவன் வெளியில் ஓடோடி வந்தான். ''வாங்க தருமா'' ஏன் வெளியவே நின்னுட்டீங்க...? உள்ளே வாங்க,'' தென்னவனின் மரியாதையில் தருமன் தர்மசங்கடப்பட்டு நெளிந்தான்.

''இல்ல பரவாயில்லீங்கண்ணே... இன்னா விசயமா கூப்பிட்டு வுட்டீங்கன்னு சொன்னீங்கன்னா...''

''அட அதைச் சொல்லத்தான உங்களை நான் வரச் சொன்னதே... அதை இப்படி வாசல்ல நின்னா பேசறது. இதைப் பாருங்க தருமன்! நான் நம்ம கட்சியிலே சேர்ந்த நாள்ல இருந்தே உங்களைச் சந்திக்கணும் சந்திக்கணும்னு துடிச்சிக்கிட்டிருந்தேன். அதுவும் எப்படியோ இத்தனை நாளும் தட்டிக்கிட்டே போயிடுச்சு. அந்த நல்ல சந்தர்ப்பம் இன்னைக்குக் கெடைச்சதுலே எனக்குப் பெரிய சந்தோஷம்,'' மொதல்ல உள்ளே வாங்க, மீதி விஷயங்களைப் பேசுவோம்,''

பாரதிராஜா

தென்னவன் மிகவும் தோழமையுடன் தருமனின் தோளில் கை போட்டு அவனை உள்ளே அழைத்துச் செல்ல, தருமனுக்கு நடப்பது நிஜமா என்ற நியாயமான சந்தேகம் எழுந்தது. அவனது மனத்தில் தென்னவனுக்கு ஓர் உயர்வான இடத்தைக் கொடுத்தான் தருமன்.

உள்ளே அழைத்துச் சென்ற தென்னவன் தருமனை அவனுக்குச் சமமாக உட்கார வைத்து அவனுக்கு டீ, டிபன் என்று உபசரித்ததில் தருமன் திக்குமுக்காடினான். தென்னவனின் உயர்ந்த பண்பையும், தன்னடக்கத்தையும் கண்டு பூரித்தான். அந்தக் கணமே எப்படியாவது அவனை வெற்றி பெறச் செய்ய வேண்டும் என்று வெறித்தனமாக முடிவு செய்தான்.

உபசரிப்பு முடித்து பேச ஆரம்பித்தான் தென்னவன். தென்னவனுக்குப் பேசவா கற்றுக் கொடுக்க வேண்டும்.. கால் மணி நேரம் அவனது பேச்சைக் கேட்க நேர்ந்தால் கல்லும் கரையும். பாவம் தருமன் எந்த மூலை!

''தருமா... தேர்தல்ல போட்டியிட்டு ஜெயிச்சுப் பெரிய பதவியில் உட்காரணுங்கற பேராசையெல்லாம் எனக்குக் கிடையாது. என்னோட நோக்கமெல்லாம் நம்ம நாட்டு மக்களுக்கு ஏதோ நம்மால் முடிஞ்ச நல்லதைச் செய்யணுங்கறதுதான். அதைச் செய்யறதுக்கு நான் தேர்தல்ல நின்னு ஜெயிச்சு ஒரு பதவியில இருந்தாதான்றது இல்ல. அதனால் நான் ஜெயிக்கறதைப் பத்தியோ அல்லது தோக்கறதைப் பத்தியோ துளியும் கவலைப்படறது கெடையாது. ஜெயிக்கணுங்கற ஒரே காரணத்துக்காகப் பொய்யான பல வாக்குறுதிகளையும் நான் பொது மக்களுக்கு அள்ளி வீசத் தயாரா யில்லை. அதனால் மொதல்ல நான் நம்ம தொகுதி மக்களுக்கு என்னென்ன குறைகள் இருக்குங்கறதைத் தெளிவா தெரிஞ்சுக்க விரும்பறேன். அதை இங்க உட்கார்ந்துக்கிட்டே என்னால் தெரிஞ்சுக்க முடியாதுங்கறது எனக்குத் தெரியும். அதனால நான் வீடு வீடாகப் போய் வோட்டு கேக்கறத விட, நம்ம தொகுதி மக்களோட குறைகளை நேரில் போய்க் கேட்கலாம்னு முடிவு செஞ்சிருக்கேன். அதுக்கு நான் உன் உதவியைத் தான் நம்பியிருக்கேன்.''

''அண்ணே நீங்க சுத்தமான தங்கம். நானும் எத்தினியோ பேர் பாத்துக்கறேன் எத்தினியோ கட்சியிலே. ஆனா உங்களை மாதிரி வித்தியாசமானவரை என் வாழ்க்கையிலேயே இப்பத்தான் மொத தபா பாக்கறேன். எந்த காரியம் செஞ்சாலும் என் தலைவரு கரைக்டாத்தான் செய்வாருண்ணே... அவரு உன்னை இளைஞர் அணித் தலைவரா போடச் சொல்லவே எனக்குத் தோணிச்சி. தலைவர் சரியான ஆளைத்தான் புடிச்சிருக்கிறாருன்னு...

உனக்கு நான் இப்ப இன்னா செய்யணும்னு சொல்லுண்ணே — செய்யறேன். என் உசிரைக் கூடக் கேளு நான் குடுத்துடுறேன்!''

— தருமன் உணர்ச்சிவசப்பட்டுப் பேசினான். ''அட அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம், தருமா! உன்னோட நட்பே எனக்குப் போதும். எனக்கு நீ செய்ய வேண்டியதெல்லாம் ஒண்ணே ஒண்ணுதான் தருமா. நான் நாளையில இருந்து நம்ம தொகுதி மக்களை நேரில பார்க்க முடிவு செஞ்சிருக்கேன். அப்படி நான் வீடு வீடா போவறப்போ நீ என் கூடவே இருந்து என்னை எல்லாருக்கும் அறிமுகப்படுத்தி வெச்சி எனக்கு உதவி செய்யணும். செய்வியா தருமா?''

தருமன் உருகிப் போனான். தன்னிடம் யாரோ 'நீ கேட்கும் கூலியைத் தருகிறேன், தயவு செய்து என்னிடம் இருக்கும் கரும்பைச் சாப்பிடுவாயா?' என்று கெஞ்சுவது போல் இருந்தது அவனுக்கு.

தனக்கு இவ்வளவு பெரிய தகுதி கொடுத்ததற்காகத்தானல்லவா அவருக்கு நன்றி சொல்ல வேண்டும் என்று நினைத்தவன்





# நீச்சல் 'சாம்ப்' ஷில்பா

**ஷி**ல்பா முதன் முதலில் நீச்சல் கற்றுக் கொள்ள ஒரு ஹோட்டல் நீச்சல் குளத்துக்குப் போனார். தயங்கித் தயங்கி நின்றவரை, அங்கிருந்த பயிற்சியாளர் தூக்கி, தொப்பென்று குளத்துக்குள் போட்டு விட, அந்தக் கணம் முதல் ஷில்பாவுக்குத் தண்ணீரைக் கண்டாலே 'அலர்ஜி' யாகி விட்டது.

கொஞ்சம் கொஞ்சமாக, ஷில்பாவின் பயத்தைப் போக்கி, அவர் நீச்சல் சாம்பியனாக உருவாக தைரியமூட்டியவர்கள் அவருடைய பெற்றோர்கள்தான். இன்று ஷில்பா, "எனக்குப் படிப்பை விட நீச்சலில்தான் ஈடுபாடு அதிகம்" என்று பெருமிதத்துடன் ஒப்புக் கொள்கிறார்!

'சிஷ்யா' பள்ளியில் பத்தாவது படிக்கும் ஷில்பா, சமீபத்தில் ஹரியானாவில் நடந்த ஜூனியர் நீச்சல் சாம்பியன்ஷிப் போட்டியில் கலந்து கொண்டு, நூறு மீட்டர் 'பேக் ஸ்ட்ரோக்' பந்தயத்தில் வெள்ளிப் பதக்கம் பெற்றார். மாநில அளவிலான நீச்சல் போட்டிகளில் இவர் ஏற்கெனவே பல வாகைகள் சூடியுள்ளவர்.

"ஹரியானாவில் ஷில்பாவுடன் போட்டியிட்டவர்களுள் இருவர் சகோதரிகள். மூத்தவள் ஜூனியர் சாம்பியன்ஷிப்பில் கலந்து கொள்ளும் வயதைக் கடந்தவள்! அவளே தங்கப் பதக்கத்தைத் தட்டிக் கொண்டாள்; இல்லாவிட்டால் ஷில்பாவுக்குத்தான் தங்கப் பதக்கம் கிடைத்திருக்கும்!" என்றார் ஷில்பாவின் தந்தை ரத்னாகர் ஆல்வா. இவர் 1950களில் தமிழ்நாடு கூடைப் பந்தாட்ட அணியின் நட்சத்திரமாகத் திகழ்ந்தவர்.

இன்று ஷில்பாவின் பதக்கங்களும் கோப்பைகளும் அவர் வீட்டு வரவேற்பறையின் கண்ணாடி அலமாரியை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளன. 'பழம் பெருமை எதற்கு' என்று தமது கூடைப் பந்தாட்டப் பதக்கங்களையும் கேடயங்களையும் மூட்டை கட்டி வைத்து விட்டார் ரத்னாகர் ஆல்வா!

— குண்டுமணி.

படங்கள்: ஸ்ரீஹரி



பெற்றோருடன் ஷில்பா

சட்டெடன எழுந்தான்.

"அண்ணே! இது போய் ஒரு உதவியாண்ணே! நீ எத்த பத்தியும் ஃபீல் பண்ணிக்காதே. உனக்கு எல்லாத்துக்கும் நான் கீறேன் உன்னை ஊடு ஊடா நான் இட்டுக்கினு போறேன்."

"தருமா நான் மொதல்ல பார்க்க விரும்பறது நம்ப குயில் குப்பத்து மக்களைத் தான்."

ஏற்கெனவே குளிர்ந்திருந்த தருமனின் தலையில் மேலும் ஐஸ் இறங்கியது போல அவன் விறைத்துப் போனான்.

"அய்யே... வுடுண்ணே தூள் கௌப்பிடுவோம். நாளைக்குக் காலைல ஒம்பது மணிக்கு நான் இங்கே வந்து உன்னை இட்டுக்கினு போறேன். 9.20 மணிக்கு டாண்ணு குயில் குப்பத்துல இருப்போம். அங்க ஆரம்பிச்சு, அப்பால நம்ம தொகுதி ஃபுல்லா மூணு நாள் சுத்துவோம். அத்துங்காட்டியும் உனக்கு எல்லா ஊடும் அத்துப்படியாயிடும். அப்ப நான் ஜல்தி போயி ஆவ வேண்டிய வேலையெல்லாம் கவனிச்சுக்கறேன். நான் வரேண்ணே."

"தருமா மொத மொதல்ல என்னைப் பார்க்க வந்துருக்கே. வெறுங் கையோட போனின்னா எப்படி... இந்தா இதைச் செலவுக்கு வைச்சுக்கோ."

தென்னவனின் கையில் புத்தம் புதிய நூறு ரூபாய்த் தாள்கள் ஐந்தாறு மின்னின.

"அட நீ இன்னா சார். நீ இன்னும் தருமனைச் சரியா புரிஞ்சுக்கலை. அஆம்.. காசாண்ணே முக்கியம் மனுசனுக்கு? போவச் சொல்ல இன்னாத்த அள்ளிக்கினு போவப் போறோம்.. துட்டெல்லாம் எனக்கு வாணா நீ வெச்சிக்க... மொதல்ல நீ நம்ப தொகுதிக்கு வா. அங்கே வந்து உன் கையால் கஷ்டப்பட்ட மனுசங்களுக்கு நாலு காசு குடு. அதுதான் இந்தத் தருமனுக்கு மெய்யாலுமே சந்தோசத்தைக் குடுக்கும். நான் வரேண்ணே."

தென்னவனின் பதிலுக்கும் காத்திராமல் தருமன் அங்கிருந்து மறைந்தான்.

ஓர் அப்பாவியைத் தன் வலையில் அமுக்கி விட்ட சந்தோஷத்தில் தென்னவன் வாய் விட்டுச் சிரித்தான்.

**ம**றுநாள், தருமன் தன் குப்பத்து மக்களிடம், அவர்களின் குறைகளைக் கேட்பதற்காகத் தொகுதியின் தனது கட்சி வேட்பாளரே நேரில் வருவதாகவும் அப்போது அவருக்கு உரிய மரியாதை செய்யப்பட வேண்டும் என்றும் வீடு வீடாகச் சென்று அறிவித்தான். அனைத்து வீடுகளிலும் அவர் வந்தால் அமர்வதற்கும், தாகத்தைத் தணித்துக் கொள்வதற்கும் அனைத்தையும் முன்னேற்பாடு செய்தான்.

பின்னர் தன் குடிசைக்குச் சென்றவன் "சிட்டு.. நாளைக்குக் காலைல நம்ம கட்சி வேட்பாளர் 'அக்னி ஆதவன்' கீறாரே, அவரு

நம்ப குயில் குப்பத்துக்கு நேருலே வந்து நமக்கெல்லாம் இன்னா கஷ்டம்னு கேட்கப் போறாரு. அவரு மாதிரி நாலு நல்லவங்க இருந்தா போதும்மே. நம்மூரும் அமெரிக்கா சப்பான் மாதிரி ஆயிடும். அவ்ளோ பெரிய ஆளு எம்மாம் மருவாதி குடுத்தாரு தெரியுமாம்மே எனக்கு! என் தோள்லே கை போட்டுக்கினாரும்மே! அவ்ளோ நல்ல மனுசன் அவரு — எப்படியும் செலிக்கணும்மே.. அப்பாலே இன்னொரு விஷயம் சொன்னா கோவப்பட மாட்டியே...''

சிட்டு அமைதியாக அவனைப் பார்த்து 'மாட்டேன்' என்பதற்கு அடையாளமாய்த் தலையாட்ட,

''சிட்டு நாளைக்கு மொத மொத அவரு நம்ம தொகுதிக்கு வராரு... அப்ப நம்ப குப்பத்து வாசல்லே நின்னு நீதான்மே அவருக்கு ஆரத்தி எடுத்து திருஷ்டி கழிக்கணும்'' என்றான் தருமன்.

மறுப்பதற்குச் சிட்டு வாய் திறக்குமுன், தருமன்,

''சிட்டு.. வழக்கமா நம்ப தொகுதில்ல நிக்கற நம்ம கட்சிக்காரங்க, நம்ம குப்பத்துக்கு வோட்டு கேட்டு வரச் சொல்ல, நம்ப குப்பத்து ஆளுங்களெல்லாம் எனக்கு மரியாதை குடுத்து நம்ப வீட்ல இருக்கறவங்களைத்தான் மொத ஆரத்தி எடுக்கச் சொல்வாங்க. இத்தினி வருஷமும் அக்காதான் மொத ஆரத்தி எடுக்கும். இப்பத்தான் அக்கா உசிரோட இல்லியே அத்தால நீதாம்மே எப்படியாச்சும் எனக்காக இதைச் செய்யணும்.''

மறுக்க வந்த சிட்டு மௌனமாய்ச் சம்மதித்தாள்.

**ம**றுநாள் குயில்குப்பம் விழாக் களை கட்டியிருந்தது. பாண்டு வாத்தியக்காரர்கள் ஒருபுறம் தூள் கிளப்பிக் கொண்டிருக்க, குயில் குப்பம் தோரணமும், கொடியும், வண்ண சீரியல் பல்பும் கொண்டு அலங்கரிக்கப்பட்ட புது மணப் பெண்ணாய்க் காட்சியளித்தது. தருமன் அதிகாலையிலேயே எழுந்து 'அக்னி ஆதவனை'க் கூட்டி வரப் புறப்பட்டு விட்டான். குப்பத்திலிருப்பவர்கள் சிட்டுவிற்கு எப்படி ஆரத்தி எடுத்து திருஷ்டி கழிக்க வேண்டும் என்பதையெல்லாம் விலாவாரியாக விளக்கியிருக்க, சிட்டுவும் அதற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

சரியாகக் காலை 9.30 மணிக்கு அக்னி ஆதவனின் கார் வந்து குயில் குப்பத்து வாசலில் நிற்க, முன்னால் அமர்ந்திருந்த தருமன் வண்டியிலிருந்து இறங்கி, அவசர அவசரமாய்ப் பின் கதவைத் திறக்க 'அக்னி ஆதவன்' அமைதியாய் வண்டியை விட்டிறங்கினான். சொல்லி வைத்தாற் போல் கூடியிருந்த மொத்த பேரும் அண்ணன் 'அக்னி ஆதவன்' வாழ்க என்று கோஷமிட்டனர்.

கூட்டத்திலிருந்த ஒரு பெண் சிட்டுவுடன் முன்வந்தாள். சிட்டு எதைப் பற்றியும் அதிக அக்கறையில்லாது தலையைக் குனிந்தவாறே 'அக்னி ஆதவனுக்கு' ஆரத்தி எடுத்து முடித்தாள். அடுத்து அவள் அவன் நெற்றிக்குத் திலகமிட வேண்டும். அதைச் செய்வதற்காக ஆரத்தித்தட்டிலிருந்த குங்குமத்தை எடுத்து அவன் நெற்றியில் திலகமிட நிமிர்ந்த சிட்டு அங்கே தென்னவனைக் கண்டதும் தன்னை மின்னல் தாக்கியது போல் உணர்ந்தாள். மறு நிமிடம் குப்பமும் கூடவே தென்னவனும் திடுக்கிட, சிட்டு தன் கையிலிருந்த ஆரத்தித் தட்டை பெருத்த ஓசையுடன் கீழே தவறவிட, அதிலிருந்த குங்குமநீர் தென்னவனின் உடையில் தெறித்து இரத்தச் சிவப்பாய் மாறியது.

(முற்றும்)

bharathiraja

அன்பு வாசகர்களே
வணக்கம்!
'என் உயிர்த் தோழன்' தொடர் ஆரம்பித்து
27 வாரங்கள் நிறைவுற்று விட்டது! இத்தொடரை
இனி தொடர முடியாத சூழ்நிலையில்.
இக்கடிதத்தின் மூலம், தங்களுடன் பகிர்ந்து
கொள்ள விழைகிறேன்!
இதுவரை வந்த சம்பவங்களும், கதாபாத்திரங்களும்
யதார்த்தத்தைத் தாங்கி வந்து உங்கள் மனதில்
இடம் பிடித்திருக்கும்!
இளைஞர்களின் உச்சகட்டமாக,
இன்றைய அரசியல் அவலங்களையும்,
நிகழ்ச்சிகளையும் வித்தியாசமான முறையில்
தர விருக்கிறேன்!
வாழ்க்கையில் எதிர்பாராமல் நடக்கும்
சம்பவங்கள் தான் எத்தனை எத்தனை!
சிட்டு, தருமன், தென்னவனின் உயிர்த்துடிப்பான
சந்திப்புகளையும் விளைவுகளையும், உங்களுக்கு
எழுத்து மூலமாக தருவதைவிட, திரையில்
புதுமையாக தர இருப்பதால், இத்தொடரை
தொடர முடியவில்லை!
இதுவரை அன்போடு வரவேற்று வந்த
ரசிகப் பெருமக்களுக்கு எனது நன்றி!

அன்புடன்
[signature]
3.10.89

அன்புள்ள பாரதிராஜா அவர்களுக்கு,
வணக்கம்.

கல்கி வாசகர்களுக்குத் தாங்கள் எழுதியுள்ள 3.10.89 கடிதம் பார்த்து அதிர்ச்சி அடைந்தேன்.

''பிறகு என்ன நேர்ந்தது? — மிச்சத்தைத் திரையில் காண்க'' என்பது போல் கதையை முடித்து விட்டீர்கள்!

கல்கியில் தொடர்கதை எழுதுமாறு தங்

களை நேரில் சந்தித்து நான் வேண்டிக் கொண்ட போது தாங்கள், இப்படிக் கதையின் முடிவைச் சொல்லாமல் "சஸ்பென்ஸில் நிறுத்தப் போவதாக என்னிடம் தெரிவிக்கவில்லை. அப்படி கூறியிருந்தால் நான் இக் கதையை வெளியிடுவதைத் தவிர்த்திருப்பேன்.

இப்போது கதையின் முடிவு எனக்குத் தெரியும். அதை நானே எழுதி எங்கள் வாசகர்களைத் திருப்தி செய்யவும் முடியும். ஆனால் தங்கள் அனுமதியின்றி அவ்வாறு செய்வது நம்மிடையே விரோத பாவம் வளரவே வழிவகுக்கும். இதனை நான் தவிர்க்க விரும்புகிறேன்.

இக் கதை பன்னிரண்டு வாரங்கள் வெளிவந்தபோதே, தீபாவளி சிறப்பிதழில் புதிய தொடர் ஆரம்பிக்க வேண்டியிருக்கும் என்றும் எனவே அதற்கு முந்தைய இதழில் முடிகிற மாதிரி திட்டமிட்டுக் கொள்ளுமாறும் வாய் வார்த்தையாக மட்டுமின்றி, கடிதம் எழுதியும் தெரிவித்திருந்தேன். ஆயினும் கதை முடியவில்லை. "தீபாவளி இதழில் முடிக்க இயலாது; மேலும் பல வாரங்கள் தேவை" என்று நீங்கள் எச்சரித்திருந்தால் தீபாவளி இதழில் புதிய தொடர் ஆரம்பமாவதைத் தவிர்த்திருப்போம். ஆனால் அத்தகைய கருத்து எதையும் தாங்கள் வெளியிடவில்லை.

தற்போது, "மேலும் மூன்று, நாலு வாரங்கள் எடுத்துக் கொண்டு கதையை முடித்துத் தாருங்கள்; ஒரே சமயத்தில் நாலு தொடர் கதைகள் கல்கி இதழ்கள் சிலவற்றில் இடம் பெற்றாலும் பாதகமில்லை" என்று கேட்டுக் கொண்டேன். அதற்கும் தாங்கள் இசையாமல், முடிவுரையாக வாசகர்களுக்கு ஒரு கடிதத்தை எழுதி அனுப்பி விட்டீர்கள்.

'கதையின் முடிவு வெளியானால் திரைப் படம் பாதிக்கப்படும்; அதனைப் பார்ப்பதில் மக்கள் ஆர்வம் குறையும்' என்று தாங்கள் எண்ண மாட்டீர்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். ஒரு படம் வெளியான அன்றே அதன் 'சஸ்பென்ஸ்' உடைந்து விடுகிறது என்பது உலகறிந்த உண்மை. விமர்சனங்கள் வாயிலாகவும் வாய்மொழியாகவும் படக் கதையின் முடிவு அனைவருக்கும் தெரிந்து போகிறது. படம் எடுக்கப்பட்ட விதத்தில்தான் திரைப்படம் ஓடுகிறது; அல்லது 'டப்பா'வாகிறது. எல்லோருக்கும் தெரிந்த சமூக, புராண, சரித்திரக் கதைகள் படமாக்கப்பட்டு வெற்றிநடை போடுவதில்லையா என்ன? இவையெல்லாம் தாங்கள் அறியாதது அல்ல.

எனவே தங்கள் கருத்தை மாற்றிக் கொண்டு, மூன்று நான்கு இதழ்களில் கதையைத் தொடர்ந்து எழுதி முடிப்பீர்கள் என நம்புகிறேன். கல்கி வாசகர்களுக்கும் எனக்கும் அளப்பரிய மகிழ்ச்சி அளிக்கக்கூடிய சாதகமான பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். கல்கி வாசகர்கள் லட்சக்கணக்கானோருக்கு ஏற்படக்கூடிய ஏமாற்றத்தைத் தவிர்க்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

மிக்க அன்புடன்,

(கி. ராஜேந்திரன்)
(ஆசிரியர், கல்கி)

திரு பாரதிராஜா,
சென்னை

---

## அலுப்பு, ரசிப்பாக மாற....



கண்களைப் பரிசோதித்துக் கொள்வதென்றால் பெரியவர்களுக்கே சங்கடம்தான். குழந்தைகள் பாடு கேட்க வேண்டுமா? உலோக ஃப்ரேமை மாட்டிக் கொண்டு, அதில் பல்வேறு லென்சுகளை டாக்டர் மாற்றி மாற்றிப் போட, எழுத்துக்கள் அடங்கிய சார்ட்டைத் திரும்பத் திரும்பப் படிப்பதென்பது அலுப்பான காரியம் தான். ஆனால் அதையே குழந்தைகள் விளையாட்டாகக் கருதி ரசிக்குமாறு செய்கிறது ஒரு பிரிட்டிஷ் நிறுவனம்!

அட்டையில் பட்சிகள் அல்லது மிருகங்களின் உருவத்தில் முகமூடிகளைச் செய்தளித்து, அதை அணிந்ததும், அதில் டெஸ்ட் ஃப்ரேம்களைப் பொருத்தி விடுகிறார்கள்.

படத்தில் ஆந்தை முகமூடி அணிந்திருக்கிறான் சிறுவன். இந்த உபாயத்தால் குழந்தைகளின் ஒத்துழைப்பு அதிகரிக்க, பரிசோதனைக்கு ஆகும் நேரம் பாதியாகக் குறைந்து விடுகிறதாம்!

# தேவேந்திரா சாரீஸ்

**மிகமிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

H.O.27. ஏலா கந்தப்பன் தெரு, சென்னை - 3. போன் : 33113
கிளை ஷோ-ரூம், கடை எண்:7, ராம்ஸ் பஜார் (பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை - 17. போன் : 443367

## தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்

★ திருமதி. விமலா ராகவன், 9A/65.முதல் மாடி, W.E.A.W.E.A.சன்னா மார்க்கெட், கரோல்பாக், புதுடில்லி-110 005. ★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38 W.E.A. அஜ்மல் கான் ரோடு, கரோல்பாக், புதுடெல்லி-5. போன் : 581050, 561786. ★ மதராஸ் டெக்ஸ்டைல்ஸ், 4/41 சரஸ்வதி மார்க், W.E.A. காரோல்பாக், புதுடில்லி-110 005. ★ காஞ்சிபுரம் சில்க் ஹவுஸ், (சவுத் என்டு) 9A/40 W.E.A. கரோல்பாக், புதுடில்லி, போன்: 5723981. ★ பங்கஜம் சுந்தரராஜன், C 6/A D.D.A. Flats முனிர்கா, புது டெல்லி-67. ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் சென்டர், 401, டெலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19. ★ ஆர். ராஜாமணி அம்மாள், 46, முத்துமாரி அம்மன் கோயில் தெரு, பாண்டிச்சேரி-605 001. ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7 பிவந்திவாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய்-400 019. ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ. 20 காமதேனு கோ.ஆப்.பெஸ்டம் சாகர், செம்பூர் பம்பாய்-89 (கிளாஸ் பாக்டரி அருகில்) ★ ஜெயஸ்ரீ, 2-ஏ, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா-26. ★ திருமதி டி. எஸ். சகுந்தலா சீனிவாசன், 18/1-ஏ, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357, 96/1, கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து). பெங்களூர்-560 003. ★ திருமதி துர்க்காம்பாள்,22 சேஷபுரம், தென்னூர், திருச்சி-620 017. ★ திரு. S. சேதுராமன், 50/8 பாணாதுரை தெற்கு வீதி, கும்பகோணம், போன்: 20972. ★ ஆர்.வி. சுந்தர்ராவ், 13, மஹால் 4-வது தெரு, மதுரை-625 001. போன்: 26295. ★ திருமதி எஸ். லட்சுமி, 24 சீனிவாசா தெரு, சேலம்-1. (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்ஸ், 123, சென்குப்தா தெரு, கோயமுத்தூர்-9. ★ ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, ஆர். எஸ்.புரம், கோவை-2. ★ மஹாராஜா சில்க்ஸ், 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி-1. போன் : 4191. ★ மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711 நாணயக்கார செட்டித் தெரு, தஞ்சாவூர். ★ பாகீரதி மூர்த்தி , 100 ஸ்ரீவராஹபுரம் தெரு, கல்லிடைக் குறிச்சி, திருநெல்வேலி. ★ எஸ்.சுந்தரம், 9, சாஸ்தான் கோயில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில்-2. ★ திருமதி. கே. சீதாலட்சுமி, 41, 4-வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை-28. போன்: 73244. ★ திருமதி சாவித்திரி பால சுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை-61. (பிள்ளையார் கோவில் அருகில்) போன் 433737. ★ சரோஜா கிருஷ்ணமூர்த்தி, A.P. 1186, 4-வது தெரு, தென்றல் காலனி (P.T.C டிப்போ எதிரில்) அண்ணா நகர், சென்னை-600 040. ★ பாலாஜி கிளாத் சென்டர், 22-ஏ, சக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை-45. ★ திருமதி சுலோசனா கோவிந்த், 2, எம்.ஐ.டி. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை-44. ★ எஸ். பொன்னப்பன் 8.3.282, 2-வது பஜார் செகந்திராபாத் (ஆ.பி.) போன் : 59562.

குறிப்பு : மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

# நகை

சுப்ரபாரதிமணியன்

ஈஸ்வரி தன்னைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டே, நகைகளைச் சரி செய்து கொண்டாள். அத்தை வந்து பக்கத்தில் நிற்பது கண்ணாடியில் பிம்பமானது. அத்தை அவளின் நகைகளைக் கூர்ந்து பார்த்தாள்:

''ஈஸ்வரி நல்ல தண்ணிக்குப் போயிட்டு வந்திடறியா?''

''செரி அத்தை... பைப் எங்கிருக்கு?''

''போரிங் பைப்புக்குத்தான் போகணும். அதிலதான் நல்ல தண்ணி... அடுத்த தெருவுக்குப் போகணும்... கமலத்தைக் காண்பிக்கச் சொல்றேன்...''

இத்தனை நகைகளையும் போட்டுக் கொண்டு போவதா என்ற குழப்பம் வந்தது ஈஸ்வரிக்கு.

''அத்தே... தண்ணிக்குப் போகணுமுன்னா நகையெல்லாம் கழட்டி வெச்சிடட்டுமா...?''

''அதனாலே என்னம்மா. போட்டுட்டுப் போ...''

''டவுன்லே பயமிருக்காதா?''

''பகல்லே என்னம்மா... நாலு தெருவுக்கும் ஒரே பைப்... நாலு தெருவும் கூடும்... புதுப் பொண்ணு, புதுப்பொண்ணுன்னு பார்ப்பாங்க. யார் வூட்டு மருமகன்னு கேப்பாங்க. இந்த ஏரியாவில பொள்ளாச்சிக்காரர் வூடுன்னாதான் எங்களைப் பத்தித் தெரியும். இத்தனை நகையைப் போட்டிருக்கறதைப் பார்க்கறவங்க, பொள்ளாச்சிக்காரர் வூட்டு மருமக உசத்திதான்னு சொல்வாங்க. நமக்கு வேண்டாதவங்களும் இருப்பாங்கல்லே. அவங்களுக்கெல்லாம் வயிறு எரியும்... எரியட்டும்! எனக்கு வசதியான, அழகான மருமக கெடைச்சிருக்கான்னு நான் எல்லாருக்கும் காட்ட வேண்டாமா?''

ஈஸ்வரிக்குக் கொஞ்சம் பயமாகத்தான் இருந்தது. நகைகளை வெளிக்காட்டிக் கொள்வதில் அத்தை பெருமைப்படுவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. சரி, எதற்கும் நகைகளோடே கிளம்பலாம் என்று குடங்களை எடுத்துக் கொண்டாள். ''நானும் வர்றேன் அண்ணி'' என்று கமலமும் கிளம்பினாள்.

சின்னப் பாம்பு வளைந்து கிடப்பது போல் குடங்களின் வரிசை இருந்தது. வரிசையின் கடைசியில் ஈஸ்வரி தன் குடங்களை வைத்தாள். எல்லோர் பார்வையும் அவள் பக்கம் திரும்பியது. குடங்களின் வரிசையையும், போரிங்

பைப்பையும், ரொம்ப நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

குடங்களையே பார்த்துக் கொண்டிருப்பது அலுப்படைய வைத்தது. மற்ற பெண்களைப் பார்த்தாள். அவர்கள் தனித்தனிக் குழுக்களாகப் பேசிக் கொண்டிருந்தனர். இவளுடன் பேச அவர்கள் அக்கறை கொள்ளாமல் இருப்பதாய்ப் பட்டது. அவர்களின் கழுத்துகளைப் பார்த்தாள். பலர் வெறும் தாலியுடன்தான் இருந்தனர். சிலருக்குத் தாலியுடன் ஒற்றைச் சங்கிலிகள் இருந்தன. நகை பற்றின அக்கறை எதுவும் இல்லாமல் அவர்கள் இருப்பதாய்ப் பட்டது.

நிரம்பின குடத்தை இடுப்பில் வைத்துக் கொண்ட ஒருத்தி கமலாவைப் பார்த்தாள்:

''யார் உங்கண்ணியா?''

''ஆமாங்க...''

இன்னொருத்தி இடைமறித்தாள்:

''பொள்ளாச்சிக்காரர் ஊட்டு மருமகளா?''

— முதல் கேள்வியைக் கேட்டவள் ஆமா என்றாள்.

''அவளுக்குப் போய்த் தளதளன்னு மருமக கெடச்சிருக்கா பாரேன்...''

''இதுவே தளதளன்னு சொல்றியா?''

''நகையையும் சேர்த்துத்தான் சொல்றேன்.''

பேச்சு மெல்லிசான தொனியில் கேட்டது. யார் யார் பக்கமிருந்து வருகின்றது என்பதையும் அறிந்து கொள்ள முடியவில்லை. குடங்கள் நகர்ந்து அவள் முறை வந்தது.

''அண்ணி நம்ம குடம் வந்திருச்சு.. நீங்க பைப் அடிங்க...''

ஈஸ்வரி மேலும் கீழுமாகப் பைப் முனையை ஆட்டி முழுப் பலத்தையும் அதில் செலுத்த, பளபளவென்று தண்ணீர் வந்தது. மூச்சிரைத்தது. குடம் நிறைவதற்குள் மார்பில் எங்கோ வலித்தது. அட்டிகையும், காசு மாலையும் கழுத்தில் இருந்து விழுந்து விடும் போல் தத்தளித்தன.

''புதுப் பொண்ணு; வேகமிருக்கும்...'' — யாரோ சொல்லிச் சிரித்துக் கொண்டார்கள். ஏறிட்டு, தூர முகம் பார்க்க முடியாமல் குடம் நிறையட்டும் என்று பம்ப் முனையை அழுத்திக் கொண்டிருந்தாள். மூச்சு நின்று நின்று வருவது போலிருந்தது.

''கழுத்தில் காதுலே கொஞ்சம் நகை மின்னுச்சுன்னா கூடுதல் சந்தோஷம்தான் புருஷனுக்கு...'' — வேறொரு பெண் பேசினாள்.

ரொம்பவும் அலுப்பாக இருந்தது ஈஸ்வரிக்கு. மூச்சிரைத்த களைப்பினூடே குடங்களை எடுத்துக் கொண்டு நடந்தாள்.

அதற்கப்புறம் தினமும் இரண்டு தடவைகளாவது போரிங் பைப்புக்குப் போக வேண்டியிருந்தது அவளுக்கு. எல்லோரும் அவளைத் தூரப் பார்வையே பார்த்தார்கள். யாரும் பேசவில்லை. எல்லோரும் கழுத்தையே பார்த்துக் கிண்டல் செய்வது போலிருந்தது. நகையில்லாமல் இயல்பாய் இருக்கலாமே என்று படும். அத்தை ''அது எதுக்கு. இருக்கறப்போ போட்டுக்கறதுதானே'' என்றாள். இவர்களுக்கும் நகைகள் இல்லாமல் இருக்காது. இருக்கலாம். வேஷம் எதற்கு என்று வீட்டில் போட்டு வைத்திருப்பார்களா. அப்படியும் விசேஷத்திற்கென்றும் போடக் காணும். அது ரொம்பவும் சாதாரண ஜனங்கள் இருக்கும் பகுதிதான் என்பதும் தெரிந்து கொண்டாள்.

எதிர்த்த வீட்டுப் பெண் ஒரு நாள் காதுக் கம்மல்கள் இல்லாமல் வந்து போரிங்கில் அழுது கொண்டிருந்தாள்: ''இருந்த ஒத்தை குண்டுமணி தங்கமும் போச்சே. இதுக்கு கூடக் கையாலாகாத பொழப்பு என்ன பொழப்போ..'' பலர் அவளுக்கு ஆறுதல் சொன்னார்கள். நகை இல்லா விட்டாலும் நல்ல வாழ்க்கை இல்லாமற் போகாது என்ற தீர்மானத்தையும் சொன்னார்கள். ஈஸ்வரிக்கும் அவளுடன் ஏதாவது பேச வேண்டும் போலிருந்தது. பார்த்து புன்னகை செய்தாள். அவளின் புன்னகை எதிர்வினையாய் அப் பெண் சற்று எரிச்சல் பட்டதையே வெளிக்காட்டியது.

அடுத்த இருபதாம் நாள் குடங்களுடன் நடக்கையில் அந்த எதிர்த்த வீட்டுப் பெண் தென்பட்டாள்! ''என்ன ஒண்ணு கொறஞ்சிருக்கு'' என்றாள். அவள் குடங்களைத்தான் சொல்வதாய் நினைத்து, ''ரெண்டு ரெண்டா தூக்க கஷ்டமாயிருக்கு'' என்றாள்.

''அதில்லே... கழுத்துலே... குடம் கொறஞ்சா எதுக்குக் கேக்கறாங்க...''

திக்கென்றது ஈஸ்வரிக்கு. சரியாய்க் கவனித்திருக்கிறாள் என்றிருந்தது.

''நேத்து அடமானக் கடையிலே வெள்ளி பாத்திரங்களைப் போடப் போனப்போ உங்க மாமா நகையை வெச்சுட்டிருந்தார்.''

''அது என்னோட நகைதான்னு எப்படிச்

''தேர்தல்ல ஜெயிச்சு வந்தா சிக்கன நடவடிக்கையை மேற்கொள்வோம்னு தலைவர் சொல்றாரே... என்ன அது?''

''தேர்தல்களுக்கு அதிகச் செலவு ஆகிறதாலே ஜெயிச்சு வந்தா அப்புறமாத் தேர்தலே நடக்காமல் கவனிச்சுப்பாராம்!''

— காஞ்சி எஸ். ஃபைசுதீன்.



சொல்றீங்க..''

''பொள்ளாச்சிக்காரர் ஆட்லே உன்னைத் தவிர யாருக்கு நகையிருக்கு..''

— அத்தை கல்யாண விசேஷங்களுக்குப் பிறகு நகை எதுவும் போடவில்லை. இரவல் வாங்கியதை முன்பு போட்டு, பின் தற்சமயம் திருப்பி இருக்கலாம். அத்தை கழுத்தில் சமீபமாய் நகை இல்லை என்பது ஞாபகம் வந்தது. ஈஸ்வரியும் கேட்கவில்லை.

''வேபாரத்துலே ஏதோ கஷ்டம். அதுதா...''

எதிர் வீட்டுப் பெண் பைப்பில் பலரிடம் இதையே சொல்லிக் கொண்டிருக்கிற மாதிரி பட்டது. அன்றைக்கு வீடு திரும்புகிற போது அவள் நிறைய பேசிக் கொண்டு வந்தது ஈஸ்வரிக்குச் சந்தோஷமாக இருந்தது.

''உங்கத்தைகிட்ட நான் பேசினதைச் சொல்லாதே. புடிக்காது...'' என்றாள்.

மறுநாள் அந்தப் பெண் ஒரு சிலரை பைப்பில் அறிமுகப்படுத்தி வைத்தாள். அவர்களுடன் மெல்ல மெல்லப் பேச்சும் வளர்ந்தது.

**ரொ**ம்பவும் அலுப்பாயிருந்தது. நகை என்பதை மனத்தில் நிறுத்திக் கொண்டே இயங்குவது சங்கடம் அளித்தது. கழற்றி விட்டால் நன்றாய் இருக்கும் என்று பட்டது. அத்தை ஏதாவது சொன்னாலும் சொல்வாள். பரவாயில்லை ஏதாவது சொல்லிக் கொள்ளட்டும் என நினைத்தாள். கழற்றினாள்.

கழற்றின கையோடு அத்தை முன் சென்றாள். அத்தை திகைத்துப் பார்த்த மாதிரி இருந்தது. ''கழட்டி வச்சுட்டியா..''

''ஆமா அத்தை!''

''சரி..''

அத்தை காரணம் எதுவும் கேட்கவில்லை என்பது ஈஸ்வரிக்கு ஆச்சர்யமாகத்தான் இருந்தது.

**அ**ன்றைக்குப் பைப்பில் பலர் அவளை அதிசயத்துடன் பார்த்தார்கள். என்னாச்சு என்னாச்சு என்று பரபரத்துக் கேட்டார்கள். ''சும்மாதான் கழட்டி வெச்சேன்'' என்று சொன்ன போது திருப்திப்படாதவர்கள் போல் பார்த்தார்கள். எல்லாம் திருட்டுப் போயிடுச்சு; வித்தாச்சு; அடமானத்துக்குப் போயிடுச்சு என்று சொல்லியிருந்தால் சந்தோஷப்பட்டிருப்பார்களோ என்றும் நினைத்தாள்.

கொஞ்ச நாள் கழித்து அத்தை அவளிடம் கேட்டாள்.

''ஈஸ்வரி நகையெல்லாம் கழட்டி வெச்சிட்டேயில்லே...''

''ஆமா அத்தை...''

''கழட்டி வெச்சுட்டதும் நல்லதுதா.. இப்ப கொஞ்சம் வேண்டியிருக்கு. பிஸினஸ் ரொம்பவும் மோசம்னு மனோகர் சொல்லியிருப்பான். ரொம்பவும் நஷ்டம்தா.



''போஸ்ட்மேன் கவர் கொடுத்தாக் கூட ரொம்பக் கூச்சப்பட்டு வாங்குறாரே உன் வீட்டுக்காரர்...?''

''அவருக்கு அடிக்கடி ஆபீஸ் ஞாபகம் வந்துவிடும்!''

— ஆம்பூர். பரந்தாமன்.

ஏதாச்சும் பணம் போட்டா திருப்தியா பண்ணலாம்.''

''பண்ணுங்க அத்தை.''

''உன் நகைகளைக் கொடுத்தா, அடகு வச்சு பிஸினஸ்லே போடலாம். விருப்பமிருந்தா குடு. அப்புறம் மீட்டுக்கவா முடியாது.''

அழுகையாக வந்தது. இவ்வளவு சீக்கிரம் நழுவிப் போகும் என்று நினைக்கவில்லை.

''மனோகர் உன்கிட்ட நேரிடையா எப்படிச் சொல்றதுன்னு சங்கடப்பட்டான்.''

**ம**னோகர் தனிமை வேளைகளிலெல்லாம் அவளின் கழுத்தைப் பார்த்தே பேசினான்: ''இந்த வருஷம் பிஸினெஸ் மட்டும் மறுபடியும் கிளிக் ஆகட்டும். இந்த வருஷக் கடைசியிலேயே கழுத்து நிறைய நகை பூட்டிடுறேன்...''

''செய்ங்க...''

''செய்வேன்னு நம்புறியா..''

''உம்...''

**பைப்** பெண்களுக்கெல்லாம் அவள் தங்களைப் போலவே இருப்பது ஆறுதல் தந்திருக்க வேண்டும். இயல்பாய்ப் பேசினர்; தாம்பத்தியம், சினிமா, பக்கத்து வீட்டு விவகாரங்கள் என்றெல்லாம். சுலபமாய் ஈஸ்வரியும் அவர்களுடன் முழுமையாய் ஒட்டிக் கொண்டாள். ''பொள்ளாச்சிக்காரர் ஆட்டு மருமக'' என்பது அவளின் அத்தையையும், அவளின் முன் விரோதங்களையும் நினைவுபடுத்துமாதலால் அப்பெயரில் கூப்பிடுவதில்லை என்றும் தீர்மானித்துக் கொண்டார்கள். 'ஈஸ்வரி' 'ஈஸ்வரி' என்று வாய் நிறைய அழைத்தனர். ஈஸ்வரிக்குச் சந்தோஷமாகவே இருந்தது.

விசேஷங்களுக்கு வெளியில் போகையில் கவரிங்கை இரவல் வாங்கிக் கழுத்தில் மாட்டிக் கொண்ட முதல் தரம் மட்டும் உச்சமான துக்கமானதாக அவளுக்கு இருந்தது.

# சொல்லாமல் சொல்லத்தானோ..?

* தாழ்ந்து வரும் கல்வித்தரம் கலந்துரையாடல் சிறப்பானதாக இருந்தாலும், நான்கு கல்லூரி மாணவ மாணவிகளையும் பங்கு கொள்ளச் சொல்லியிருக்கலாம் என்று தோன்றியது. முகப்பு அட்டையில் இருந்த மாணவி தன் புத்தகங்களுடன் டானியல் ஸ்டீல் நாவலையும் உடன் வைத்திருந்தது, தரம் குறைந்ததற்கான ஒரு காரணத்தைச் சொல்லாமல் சொல்லத்தானோ!

சென்னை — 92. கே. ராஜகோபாலன்.

* தாழ்ந்து வரும் கல்வித் தரம் பற்றிய உரையாடலைப் படித்தேன். கல்வித்தரம் — கல்லூரிகளில் மட்டும் குறைந்துவிட வில்லை. கல்வி பரவலாக்கப்பட வேண்டும் என்பதால் தரமான கல்விக்கான அடித்தளமே அமையவில்லை. கரும் பலகை இல்லாத பள்ளிகளும், ஒற்றையாசிரியர் பள்ளிகளும் தொடர்வது ஒருபக்கம். உயர்நிலைப் பள்ளிகளிலும் மேனிலைப் பள்ளிகளிலும் ஒரேவகுப்பில் 60, 70 என்ற மாணவர் எண்ணிக்கை மற்றொருபக்கம். தங்கள் பள்ளி மாணவர்கள் எல்லாம் நல்ல உயர்ந்த மதிப்பெண்கள் பெற வேண்டும் என்பதற்காகப் பார்த்தெழுதும் பழக்கத்தைத் தலைமை ஆசிரியர்களே ஊக்குவிக்கும் கொடுமை — வெளியே பயிரை மேய்தல் — இன்னொருபக்கம். இப்படி எ த் த னை எத்தனையோ?

தேவக்கோட்டை. க. வேலையா.

* இவ்வாரம் கல்கியில் இடம் பெற்ற 'பிச்சை மாமாவின் கடிதம்' சிறுகதை நெஞ்சைத் தொட்டு வருடிய அருமையான படைப்பு. கதையைப் படித்த போது, சிறுகதை என்ற உணர்வே ஏற்பட வில்லை. பக்கத்து — எதிர்வீட்டுச் சம்பவத்தை நேரில் பார்ப்பது போல் இருந்தது. இறுதி இரண்டு பாராக்களைப் படித்த போது, கண்கள் குளமாயின.

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

* தமிழக அரசு தடை செய்திருப்பது மற்ற மாநிலங்களில் தனியார் நடத்தும் பரிசுச் சீட்டுகளைத்தான். மற்ற மாநில அரசுகள் நடத்தும் பரிசுச் சீட்டுகள் தடை செய்யப்படவில்லை. 'தராசு' இதைப் புரிந்து கொள்ளட்டும்!

ஆலடியூர். வெள்ளக்கால் இரா. கந்தையா.

* நெல்லை ஜெபமணி அவர்களின், தன்னம்பிக்கையும் விடாமுயற்சியும், எடுத்த காரியத்தை முடித்தே தீருவது என்ற குறிக்கோளும் என் நெஞ்சத்தை நெகிழ்த்தின. பலனை எதிர்பார்க்காமல் அவரும், அவருடைய சகாக்களும் மேற்கொண்ட யாத்திரையைச் சாதாரணச் செயல் என்று கூறிவிட முடியாது! தக்க சமயத்தில் அவரைப் பற்றிச் செய்தியை முழுமையாக வெளியிட்ட ''கல்கி''க்கு மனமார்ந்த நன்றி...!

காட்டாங்குளத்தூர். எஸ். குருமூர்த்தி.

* ஒரு கி. மீட்டர் நடப்பது என்றாலே பேருந்தை எதிர்பார்க்கிறோம்! எழுபது வயதில், எழுநூறு கி.மீக்கு மேல் நடந்த நெல்லை ஜெபமணி பாராட்டுக்குரியவர் தான்!

திட்டக்குடி. அ. சரவணராசன்.

* போட்டிக் கதையின் கரு இன்னும் யதார்த்தத்தில் சில வீடுகளில் நடப்பது தான். ஆனால், பெரும்பாலான எழுத்தாளர்கள் இக்கருவினை நகைச்சுவையாக அன்றி சீரியஸாக உபயோகிக்கத் தயங்குகிறார்கள். ஆனாக இருந்தாலும்.... கே.பி. ஜனார்த்தனத்தின் 'புதிய பார்வை' பிரகாசிக்கும்படி இருந்தது.

குடியாத்தம். கே.வி.எஸ். மணியன்.

* முதலைகள் பட்டினியால் கண்ணீர் வடிப்பதாகக் கூறியது (கட்டுரை) வேதனையானதுதான். இதைத் தீர்க்க மேனகா காந்தியைத்தான் அணுக வேண்டும். ஏனென்றால் இந்த வாயில்லா ஜீவன்களுக்காகக் கண்ணீர் வடிக்கும் உண்மையான அரசியல் வாதி அவர்தானே.

வேலூர். கே.ஆர். தேவேந்திரன்.

* இந்த வாரத் தலையங்கம் வெகு அற்புதம். லஞ்ச ஊழல் தலை விரித்தாடும் காங்கிரஸ் ஆட்சியை ஏற்பதா? நிலையான ஆட்சி அமையுமா என்னும் ஐயத்தை ஏற்படுத்தும் தேசிய முன்னணியை ஏற்பதா? என்று வாக்காளர்கள் குழம்பித் தவிக்கையில், முன்னது பயங்கர நிஜம் என்றும், பின்னது கவலையில் விளைந்த அனுமானம் என்றும் விளக்கித் தவிர்க்கப்பட வேண்டியது ஊழல் ஆட்சியே என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளீர்கள்.

சென்னை — 114. பார்த்திபன்.

* 8.10.89 இதழில் கேள்வி பதில் பகுதியில், மாண்புமிகு மக்கள் நல்வாழ்வு துறை அமைச்சர் டாக்டர் பொன்முடி அவர்கள் கூறியதாக வெளியிட்டுள்ள கருத்து தவறானதாகும். எங்கள் அமைச்சர் கட்சிப் பொதுக் கூட்டத்தில், "ஜெயலலிதாவின் முந்தானையில் தேசியத்தைத் தேடுகின்ற வாழப்பாடிகள்....." என்றுதான் குறிப்பிட்டுப் பேசினாரே தவிர, கல்கியில் குறிப்பிட்டுள்ளதைப் போல் பேச வில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சட்டசபை முந்தானைப் பிரச்னையையே திரு. வாழப்பாடி ராமமூர்த்தி அவர்கள் தொடர்ந்து பேசி வருவதைக் குறிப்பிட்டுப் பேசும் பொழுது அமைச்சர் அவர்கள் இவ்வாறு குறிப்பிட்டார்.

சென்னை — 9. ஆ. ரவிகார்த்திகேயன்
(நேர்முக உதவியாளர்)
(மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர்)

* அமைச்சர் பொன்முடியின் கூற்று பற்றிய கேள்விக்குத் தராசு அளித்த பதில், 'கல்கி நடுநிலை வார இதழ்' என்பதை உறுதி செய்கிறது.

வாழ்க 'கல்கி'யின் நடுநிலைப் போக்கு!

சேலம் — 5. பி.கே. பரமேஸ்வரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

